# மணம் கமழும் பாதையில்...

சிறுமி சந்தனா சந்தன மரத்தின் இலைகளை முகர்ந்துவிட்டு, ''பூ! நீ ஒன்றும் சந்தன மரம் அல்ல. அதுபோல மணக்க வில்லையே! என்னை ஏமாற்றுகிறாயா?'' என்று கேட்டாள். ''அஹ்ஹா'' என்று சிரித்த அந்த முதிர்ந்த மரம் ''எனது நறுமணம் என் இலைகளில் இல்லை. அது என் இதயப்பகுதியிலும் வேர்களிலும் உள்ளது. இதயப் பகுதி என்றால் மேல் பட்டையோ அல்லது மேல்பரப்பு பகுதியோ அல்ல. உள்ளிருக்கும் தண்டுப்பகுதி. என் வேர்களில் என்ணெய் இருப்பதால் சந்தன மரங்களை அடித்தண்டில் வெட்டாமல் வேரோடு சாய்த்துவிடுகிறார்கள். இதனால் எண்ணெய் நிறைந்த வேர்கள் வீணாவது இல்லை.



சந்தனமர எண்ணெய் மஞ்சள் நிறத்தில் பசை போல, அலாதியான நறுமணம் கொண்டது. இந்த எண்ணெய் சாந்தலோல் என்ற எரிதிரவத்தை அதிகமாகக் கொண் டதே இந்த நறுமணத்திற்குக் காரணம். இதற்கு நறுமணமும் மருந்தின் இயல்பும் சாந்தலோலிலிருந்து கிடைக்கின்றன. நல்ல சந்தனமர எண்ணெயில் 90 சதவீதம் சாந்தலோல் இருக்கும்.



சந்தனத்தின் நற்குணத்தை கடந்த 80 வருடமாக உங்கள் இல்லத்துக்குக் கொண்டு வருகிறது மைசூர் சாண்டல் சோப்.







## உங்கள் சந்தன மரத்தை அறிந்து கொள்ளுங்கள்

கீழுள்ள வாக்கியங்களில் எவை சரியானவை? எவை தவறானவை?

1. சந்தனமர எண்ணெய் அத்தர் தயாரிக்க ரோஜா, மல்லிகை போன்றவற்றின் எண்ணெய்களோடு கலக்கப் பட்டு உபயோகிக்கப்படுகிறது.
2. ஐஸ்கிரீம் போன்றவற்றைப் பசை நிலையில் வழவழப்பாக்க சந்தனமர எண்ணெய் பயன்படுத்தப்படுகிறது.
3. காய்ச்சலையும் தலைவலியையும் போக்க சந்தனக் குழம்பு நெற்றியில் நன்கு தடவப்படுகிறது.

விடை : எண்.2 தான் தவறு.
















# Heroes start early.

Ride, race, take a tumble or even take a fall.
Because it's never too early to be a hero.



# குகைகளை அறியுங்கள்!

குகைகளைப் பற்றி நீங்கள் அறிவீர்கள்! இயற்கையில் உருவான, ஒரு மனிதன் நுழைந்து செல்லும் விதத்தில் அமைந்த இம்மாதிரியான குகைகளைக் காணச் செல்வோம். இவை ஆந்திரப் பிரதேசம் கர்நூல் மாவட்டத்தில் உள்ள பேலும் குகைகள். சமவெளிப் பிரதேசத்தில் அமைந்துள்ள குகைகளிலேயே இதுதான் மிக நீளமானது. 3 கி.மீ. நீளமுள்ள இதில் 2 கி.மீ. வரை எளிதில் சென்று விடலாம். இம்மாதிரி குகைகளுள் பல குகைகள் ஓரிடத்தில் சேர்ந்திருப்பதைக் காணலாம்.

பேலும் குகைகளுள் நீண்ட வளைவான பாதைகள் உள்ளன. இவை எதிர்பாராத விதமாய் பல விசாலமான அறைகளுக்குக் கொண்டு சென்றுவிடுகின்றன. இந்த அறைகளில் நீர்த்தொட்டிகள், பீய்ச்சி அடிக்கும் ஊற்றுகள், கூரையிலிருந்து தொங்கும் கூம்பு வடிவச் சுண்ணாம்புப் பாறைகள், தரையில் உருவாகியுள்ள கூம்பு வடிவச் சுண்ணாம்பு மேடுகள் ஆகியவற்றைக் காணலாம். குகையில் கரிவாயு கலந்த நீர் சுண்ணாம்புப் பாளங்களை இளக்கியோ அல்லது கரைத்தோ குகையின் கூரையிலிருந்து மெதுவாகச் சொட்டும்போது அது மெதுவாக இறுகிக் கூம்பு வடிவில் குகையில் கூரையில் தொங்குகிறது. அதே நீர் தரை மீது சொட்டு சொட்டாக விழுந்து இறுகும்போது குகைக்குள் சுண்ணாம்பு மேடுகள் உருவாகின்றன.

ஆந்திரப் பிரதேசம் சுற்றுலா முன்னேற்றக் கார்பரேஷன் (ஏபிடிடிசி) பேலும் குகைகளை அழகிய சுற்றுலாத் தலமாக மாற்றியுள்ளது. ஏபிடிடிசி இவற்றின் உள்ளிருந்த சகதியை அகற்றி வழிகளை அமைத்து ஒளிமயமாக்கி வியக்கச் செய்திருக்கிறது. உள்ளே நல்ல காற்று வீசவும் ஏற்பாடுகளைத் திறம்படச் செய்துள்ளது. படிகள் வழியாக பேலும் குகைக்குள் செல்வோம்.

முதலில் குகையில் காணும் அறை சிம்மத் துவாரம் எனப்படுவது. இங்கு அழகிய சிறு குளத்தையும், சிறிய நீர்வீழ்ச்சியையும் நீர் ஊற்றையும் காணலாம். இது இக்குகையின் பெரிய அறை. இதன் உயரம் 9 மீ. மற்றொரு அறை மண்டபம் எனப்படுவது. இது தரைமட்டத்திற்குக் கீழுள்ளது. இங்கு சுண்ணாம்பு மேடுகளைக் காணலாம். இன்னொரு அறை பாதாள கங்கை எனப்படுவது. இந்த அறைகளின் கூரைகள் தரைமட்டத்திலிருந்து 9 மீ. உயரம் உள்ளன. மேலே வளைந்து வளைந்து ஒரு கால்வாய் ஓடுகிறது. இதன் பாதையும் ஒளிமயமாக்கப்பட்டுள்ளது.

தொங்கும் கூம்பு வடிவச் சுண்ணாம்புப் பாளங்கள் உள்ள அறையின் பெயர் கோடி லிங்காலு. இங்குள்ள காட்சி இமயமலையே தலை கீழாகித் தொங்குவது போன்ற பிரமையை ஏற்படுத்துகிறது. இந்தச் சுண்ணாம்புக் கூம்புகளில் வேறு பல

ANDHRA PRADESH TOURISM DEVELOPMENT CORPORATION





# பேலும் குகைகள்

## இயற்கையின் அதிசயம்!

தாதுப் பொருள்களும் கலந்திருப்பதால் ஒளிபட்டதும் அவை பல வண்ணங்களோடு மிளிர்கின்றன.

பல லட்ச ஆண்டுகளுக்கு முன்பிருந்து வரும் இக் குகைகளைப் பற்றி தற்காலத்தில் புவியியல் ஆராய்ச்சி யாளர் ராபர்ட் ப்ரூஸ்ஃபூட் தான் முதலாவதாக 1884ல் குறிப் பிட்டார். நூறாண்டுகளுக்குப் பிறகு 1982-83ல் ஜெர் மன் ஆராய்ச்சியாளர் டேனியல் கெபார் ஒரு குழுவுடன் வந்து பேலம் குகைகளைச் சுற்றிப் பார்த்து, அதன் நில அமைப்பு, உருவ, சுற்றுப்புற அமைப்புகள் பற்றி விரி வான ஆய்வு நடத்தினார். 1999ல் ஏபிடிடிசி இக்குகை களைத் தன் பொறுப்பில் ஏற்று சுற்றுலா மையமாக்கிப் பல நவீன வசதிகளைச் செய்துள்ளது.

நீங்கள் இயற்கையின் எழிலை ரசிக்க வேண்டு மானால் பேலம் குகைகளைப் பார்த்தே ஆக வேண்டும்.



**அமைந்துள்ள இடம் :** ஆந்திராவின் கர்நூல் மாவட்டத்தில் கொலிமி குண்ட்ல மண்டலத்தில் பேலும் கிராமத்தினருகே இவை உள்ளன. பக்கத்து ஊர்களில் இருந்து பேருந்து கள் இங்கு வருகின்றன. கர்நூலில் இருந்து பனகனப்பள்ளி வழியாகச் சென்றால் 110 கி.மீ., நந்தியாலில் இருந்து 60 கி.மீ., தாட்பத்ரியிலிருந்து 31 கி.மீ., அனந்தபூரிலிருந்து 84 கி.மீ., பெங்களூரிலிருந்து 270 கி.மீ. தூரம். இங்கு பள்ளி மாணவர்களின் சுற்றுலாவிற்கு ஏபிடிடிசி தக்க ஏற்பாடுகளைச் செய்து அறிவுரை வழங்கி வழி காட்டும்.



சிறப்புப்படைப்பாக மதிமுகம் : 105 ஆகஸ்ட் : 2002 புன்னகை : 6



இந்தியப் புராதனக் கதைகள்

25



சொல்வதா பலித்தது?

19



மர்மக்குளம்

11



விநாயகர்

45

## பொருளடக்கம்






SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
**to**

Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120

**புக்போஸ்டில்**

உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# தாய்நாட்டிற்கு விசுவாசம்

இந்தியா சுதந்திரம் பெற்ற 55 ஆண்டுகள் ஆகிவிட்டது. நாம் விவசாயப் பொருளாதாரத்திலிருந்து தொழில் பொருளாதார வட்டத்துள் வந்து விட்டோம். நாம் முன்னேறும், முன்னேறாத, முன்னேற முடியாத நாடுகளை முந்திக் கொண்டு வந்திருக்கிறோம். நம் விண்வெளி ஆராய்ச்சிகளும் அணு பரிசோதனைகளும் யாவராலும் பாராட்டப்படுகின்றன.

இவை யாவும் நாம் பெருமைப்பட்டுக் கொள்ளும் விஷயங்களே. ஆனாலும் ஒன்றை மட்டும் மறந்துவிடக் கூடாது. அது நம் பெருமைக்குரிய கடந்தகால வரலாறு தான். ஒருமுறை காந்திஜீ, ''நான் என் வீட்டைச் சுற்றி உயரமான மதில் சுவரை எழுப்பிவிட்டு ஜன்னல்களை மூடியே வைத்திருக்க விரும்பவில்லை. உலகின் மற்ற பண்பாடுகளின் காற்றலைகள் என் வீட்டினுள் வரலாம். ஆனால் அதே சமயம் என் வீட்டிலிருந்து என் பழம் பெரும் பண்பாடு காற்றில் அடித்துச் செல்லப்படக்கூடாது,'' என்றார். அவரைப் போலவே சுவாமி விவேகானந்தரும் இந்த அறிவுரையை முன்பே கூறினார்.

இன்று முற்பட்ட நாடுகளாக ஜெர்மனியையும் ஜப்பானையும் நாம் காண்கிறோம். இரண்டாவது உலகப் போரின் முடிவில் இவை சீர் குலைந்து பாழாகிப் போயிருந்தன. ஆனால் எஞ்சிய அந்நாட்டு மக்கள் தம் தாய்நாடுகளை முன்னேற்ற அயராது உழைத்துத் தம் நாடுகளின் மீது கொண்டுள்ள விசுவாசத்தை வெளிப்படுத்தினார்கள். அடுத்த பத்தே ஆண்டுகளில் அந்நாடுகள் அதிவேகமாக முன்னேறிவிட்டன.

ஒரு நாடு அதன் மக்களிடமிருந்தே சக்தி பெறுகிறது. நாம் இதை மறக்காமல் இந்த ஆண்டு சுதந்திர தினத்தில் நினைவில் கொண்டு நம் நாட்டின் முன்னேற்றத்திற்காக மேலும் உற்சாகத்துடன் செயல்படுவோமாக!

ஆசிரியர் : **விஸ்வம்**
**Visit us at : http://www.chandamama.org**



## இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள்-11

நவ இந்தியாவில் நீங்கள் பல மாவீரர்களைக் காண முடியும். அவர்களில் ஒரு சிலரைப் பற்றியே இந்த வினாக்கள். உங்களால் விடைகளைக் கூற முடியுமா?

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1. ஆஸ்கார் விருதைப் பெற்ற ஒரே இந்தியத் திரைப்பட இயக்குநர் நான். இது என் வாழ்வின் பெரும் சாதனை. நான் யார்?

----------------------------------------

2. எனக்கு 1987ல் முதலாவது உலக உணவுப் பரிசு அளிக்கப்பட்டது. பசுமைப்புரட்சியின் தந்தை எனவும் என்னைக் குறிப்பிடுவார்கள். நான் யார்?

----------------------------------------

3. நான் மராட்டியில் புகழ்பெற்ற நாடக ஆசிரியர். என் நாடகங்கள் நகைச்சுவை ததும்புபவை. நான் யார் தெரியுமா?

----------------------------------------

4. நான் முதலாவது இந்திய விண்வெளி வீரர். இதிலிருந்தே என் பெயரை அறிந்து கூறுங்கள்.

----------------------------------------

5. என் பெயர் 'ஒடிஸி' நடனத்தோடு இணைந்தது. எனக்குப் பத்மஸ்ரீ, பத்மபூஷண் விருதுகள் கிடைத்துள்ளன. நான் யார்?

----------------------------------------

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த தேசிய மாவீரர் :............................................

............................................................

............................................................

போட்டியாளரின் பெயர்: ...............................

வயது: ................. வகுப்பு: ...........................

முகவரி: ...............................................

............................................................

பின்கோடு: ......................... போன்: ....................

போட்டியாளரின் கையொப்பம்: .............................

பெற்றோரின் கையொப்பம்: ...................................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-11**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி செப்டம்பர் 5, 2002

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டுமே.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்



# விஞ்ஞானி குடியரசுத் தலைவர்



இந்தியக் குடியரசின் பதினோறாவது தலைவரா கியுள்ள டாக்டர் ஏ.பி.ஜே. அப்துல்கலாம் நம் நாட்டு தலைசிறந்த விஞ்ஞானி களில் ஒருவர்.

ஜுலை 24ல் இவர் இப் பதவியை ஏற்றார். உலக வரலாற்றிலேயே ஒரு விஞ் ஞானி ஒரு நாட்டின் ஆட் சித் தலைவர் ஆனார் என்பது இதுவே முதல் நிகழ்ச்சியாகும். டாக்டர் அபுல் பகீர் ஜைனுலாப்தீன் அப்துல் கலாம் என்பது இவரது முழுப் பெயராகும்.

இராமேஸ்வரத்தில் 1931ல் ஒரு சாதா ரண குடும்பத்தில் பிறந்த இவர் தம் கல்விப் படிப்பை இராமநாதபுரத்தி லுள்ள ஒரு கிறிஸ்துவ மிஷன் உயர் பள்ளியில் முடித்துவிட்டு திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரியில் சேர்ந்து இயற்பியலில் பட்டம் பெற்றார். பிறகு சென்னை எம்.ஐ.டி.யின் விமானத் துறைக்கான பட்டப்படிப்பை முடித்தார். இதன் பின் மத்திய அரசின் ராணுவத் துறையின் ஆராய்ச்சிக்கும் முன்னேற்றத் திற்கும் அமைக்கப்பட்ட பகுதியில் நாற்பது ஆண்டு காலம் பணி புரிந்தார். இவர் அக்னி, பிருத்வி போன்ற விண் ஏவுகணைகளைத் தயாரித்துச் செலுத்திய பொறுப்பை ஏற்றுக் கொண்டவர். இத னால் இவருக்கு 'ஏவுகணையாளர்' என்ற பெயரும் ஏற்பட்டது. போக்ரான் அணு குண்டு வெடிப்புச் சோதனையை வெற்றி கரமாக நடத்தினார். இதன் பின் இந்திய அரசின் விஞ் ஞான ஆலோசகரானார். இவருக்கு நாட்டின் உயர்ந்த பட்டமான 'பாரத ரத்ன' வழங்கப்பட்டது.

ஆலோசகர் பணியில் இருந்து ஓய்வு பெற்ற பின் இவர் குழந்தைகளிடையி லும் இளைஞர்களுடனும் காலம் கழிக்க விரும்பினார். இவர் அவ்வப்போது பள்ளிகளுக்குச் சென்று மாணவர்களுடன் கலந்துரையாடல் நடத்தி வந்தார். காந்திஜீ பிறந்த போர் பந்தரில் ஒரு பள்ளி மாணவி இவரிடம் நாட்டிற்கு என்ன செய்தி அளிக்கிறீர்கள் என்று கேட்டபோது இவர் ''நாடு தான் ஒரு தனி மனிதனைவிட உயர்ந்து முத லிடம் பெறுவது'' என்றார். இவர் தான் ஓர் இந்தியன் என்பதை வலியுறுத்திய தோடு கி.பி.2020க்குள் நம் நாட்டை முற்றிலும் வளர்ந்த நாடாக விளங்கச் செய்ய தான் விரும்புவதாகவும் கூறினார்.

இவர் திருக்குரானையும் பகவத்கீதை யையும் மனனம் செய்தவர். வீணை இசைப்பதில் வல்லவர். மகாத்மா காந்தி யின் தலைமையையும் பண்டித ஜவா ஹர்லால் நேரு நாட்டிற்கு வழிகாட்டிய தையும் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்து வருபவர். 'அம்புலிமாமா'வின் ஆயிரக் கணக்கான வாசகர்கள் சார்பில் குடியரசுத் தலைவர் அப்துல்கலாமை வாழ்த்தி வரவேற்கிறோம்.

# தன்னலமில்லாத் தலைவர்

''நான் கல்வியறிவு இல்லாதவன் தான். பல்கலைக்கழகத்தில் படிக்கவில்லை. ஆனால், தமிழ்நாட்டிலுள்ள ஆறுகளும், ஏரிகளும் எனக்கு அத்துப்படி. மக்களின் வாழ்க்கை முறையை அறிந்தவன். இது பூகோளம் இல்லையா? புத்தகங்களில் உள்ள நேர்கோடுகளும் வளைகோடுகளும் தானா பூகோளம்?'' 1954-ஆம் ஆண்டு தமிழ்நாட்டின் முதலமைச்சராகப் பதவி ஏற்றபோது தன்னை விமர்சித்தவர்களுக்கு பெருந்தலைவர் காமராஜர் அளித்த பதில் தான் இது.

அவருக்குத் தமிழைத் தவிர வேறு மொழி தெரியாது. ஆயினும் நிர்வாகத் திறமையில் பட்டம் பெற்றவர்களுக்குச் சிறிதும் குறைந்தவரில்லை. தமிழகத்தை இந்தியாவில் எல்லாத் துறையிலும் முதலிடம் வகிக்கச் செய்தார்.

மக்களுக்காக அரசாங்கம் என்பதை வலியுறுத்தினார். மக்களுக்கு நன்மை பயக்கும் திட்டங்களுக்கு சட்டங்களும் விதிகளும் இடையூறாக இருந்தால் அவற்றை மாற்றியமைக்க அவர் தயங்கியதில்லை.

தென்தமிழ்நாட்டின் விருதுநகர் கிராமத்தில் 1903-ஆம் வருடம் ஜூலை மாதம் 15-ஆம் தேதி காமராஜர் பிறந்தார். அவரது தந்தை குமாரசாமி சாதாரண தேங்காய் வியாபாரி. தமிழ்நாட்டின் பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த குடும்பத்தில் பிறந்த காமராஜர் பின்னாளில் இந்தியாவின் மூத்த தலைவர்களுள் ஒருவராகத் திகழ்ந்தது அவரின் திறமைக்கும் உழைப்புக்கும் சான்று.

1919-ஆம் ஆண்டு பஞ்சாபில் நடந்த ஜாலியன்வாலாபாக் படுகொலை அவரை ஆங்கிலேயர் மீது சினம் கொள்ள வைத்தது. அண்ணல் காந்தியடிகளின் எளிமை, அஞ்சாமை, நாட்டின் விடுதலைக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட உயரிய செய்கையால் ஈர்க்கப்பட்டு, இந்திய தேசிய காங்கிரசின் தொண்டராக இணைந்து விடுதலைப் போராட்டத்தில் முழு மூச்சுடன் ஈடுபட்டார். அயராத உழைப்பினால் பதவிகள் அவரைத் தேடி வந்தன.

தமிழ்நாட்டின் முதலமைச்சராக இருந்தபோது குக்கிராமங்களில் கூட பள்ளிகளை நிறுவினார். கல்வியை இலவசமாக்கினார். மாணவர்களுக்கு மதிய உணவும், இலவசச் சீருடையும் வழங்கினார்.



இந்த எளிய மனிதர் 1975-ஆம் ஆண்டு அக்டோபர் 2-ஆம் தேதி உயிர் நீத்தார். இவ்வாண்டு அவரது பிறந்த நாள் நூற்றாண்டு ஆகும்.



# மர்மக் குளம்

## 6

(ஜெயசீலனும் சித்தசாதகனும் யானை மீதிருந்த முதலை மனிதனைப் பிடித்து அதே யானை மீது அமர்ந்து ஹிரண்யபுரத்திற்குச் சென்றனர். வழியில் ஒரு மரத்தின் மீதிருந்த வேடன் குண்டப்பன் முதலை மனிதன் மீது அம்பை எய்தான். அது அவனது தோளில் குத்தவே முதலை மனிதன் கோபம் கொண்டு தன் யானையை அந்த மரத்தையே வேரோடு பிடுங்கி எறிய ஏவினான். அப்போது -)

வேடன் குண்டப்பன் அதுகண்டு அலறினான். மரத்தோடு அவனும் கீழே விழவே, ஜெயசீலன் முதலை மனிதனை முறைத்துப் பார்த்து, ''அடே! முதலை வேஷக்காரா! நீ ஏன் என் அனுமதி பெறாமல் யானையை ஏவி மரத்தைச் சாய்த்தாய்?'' என்று கோபத்தோடு கேட்டான்.

முதலை மனிதனும் வலி தாங் காமல் முக்கி முனகியவாறே ''ஐயா! நான் இப்படிச் செய்திராவிட்டால் அந்த வேடன் இன்னொரு அம்பை எய்து என்னைக் கொன்றிருப்பான்'' என்றான்.

அப்போது சித்தசாதகன் யானை மீதிருந்து கீழே குதித்து மரக்கிளை களிடையே சிக்கி அவதிப்பட்டுக் கொண்டிருந்த குண்டப்பனை மெது வாகத் தூக்கி நிறுத்தினான். அவனது எலும்பு ஏதாவது முறிந்திருக்குமோ என சித்தசாதகன் எண்ணிக் கொண் டிருக்கையில் அவன் ஆச்சரியப்படும்



''இதென்ன கொடுமை? கத்தியால் குத்தப்பட்டது போதாது என்று அம்பு காயம் வேறா?'' என்று கேட்டார்கள்.

அதைக் கேட்ட முதலை மனிதன் ''ஆ! இப்படி எல்லோரும் கேலி பேசும் நிலைக்கு வந்துவிட்டேனே! நான் இனி உயிர் வாழக் கூடாது. நான் தற்கொலை செய்துகொண்டு மடிகிறேன்,'' என்று விரக்தியுடன் கூறினான். சுற்றிலும் பார்த்துவிட்டுத் தன் ஈட்டியை எடுக்கப் போனான். அதைக் கண்ட சித்தசாதகன் சட்டெனப் பாய்ந்து அந்த ஈட்டியைத் தன் கையில் எடுத்துக் கொண்டுவிட்டான்.

ஜெயசீலனும் சித்தசாதகனும் முதலை மனிதன் இருந்த யானையின் மீது சட்டென ஏறி அவனது இரு பக்கங்களிலும் நின்று கொண்டார்கள். சித்தசாதகன் அவனிடம், ''பயப்படாதே! உன் உயிருக்கு எந்த ஆபத்தும் இல்லை. உன்னை இங்கே அருகிலுள்ள கிராமத்திற்கு அழைத்துக் கொண்டு போய் அங்கு தக்க சிகிச்சை அளிக்க ஏற்பாடு செய்கிறோம். உன் காயங்கள் முற்றிலும் ஆறிய பிறகே உன்னை இரணியபுர மன்னரிடம் கொண்டு போய்ச் சேர்ப்போம்,'' என்றான்.

முதலை மனிதன் இரு கைகளையும் கூப்பியவாறே, ''எல்லாம் அந்த மர்மக்குள மகேஸ்வரனின் அருளே! என்னை கிராமத்திற்கு அழைத்துச் செல்லும் வழியில் இன்னும் யாராவது தாக்காதபடி காக்க வேண்டும்,'' என்று பணிவுடன் வேண்டினான்.

ஜெயசீலனும், ''கவலைப்

விதத்தில் குண்டப்பன் துள்ளிக் குதித்து ஓடி, ''மந்திரக்காரா! என் எலும்பு எதுவும் முறிந்து போய்விடவில்லை. இதோ பார்! என் இந்த அம்பு அந்த யானை மீதுள்ள முதலை மனிதனை எமலோகத்திற்கே அனுப்பிவிடும்,'' என்று கூறி, வில்லில் அம்பை வைத்தான்.

அதைக் கண்ட ஜெயசீலன் யானை மீதிருந்து கீழே குதித்து ஓடிப்போய் குண்டப்பனின் கழுத்தைப் பிடித்து நெருக்கி, ''அடே! நீ எனக்கா குறி வைக்கிறாய்?'' என்று கோபத்தோடு கேட்டான். அவன் பிடித்த பிடியில் நடுநடுங்கிய வேடன் வில்லையும் அம்பையும் கீழே நழுவ விட்டான். இதே சமயம் வைத்தியர்களான மணியும் முத்துவும் அங்கு வந்தார்கள். அவர்கள் முதலை மனிதனைப் பார்த்துவிட்டு வியப்புடன்,

படாதே! உன்னை யாரும் தாக்காத படி நாங்கள் பாதுகாக்கிறோம்,'' என்றான். அவர்கள் ஏறி இருந்த யானை அங்கிருந்து மெதுவாகச் செல்லலாயிற்று. அது கொஞ்ச தூரம் போனதும் அவர்களுக்குத் தாரை தப்பட்டைகளின் சத்தமும் மனிதர்கள் 'வீல் வீல்'என்று கத்துவதும் காதில் விழுந்தது. மறுநிமிடம் வேடர்களின் பூசாரி ஒருவனும் பத்து பனிரெண்டு வேடர்களும் அங்கிருந்த மரங்களிலிருந்து குதித்து அவர்களை அணுகினார்கள்.

வேடர்களின் பூசாரி தலைவிரி கோலமாய் 'ஆ ஊ' என்று கத்தி ஆர்ப்பாட்டம் செய்து கொண்டு, ''நான் தான் மகாகாளி. அந்த முதலை மனிதனின் கழுத்தை அறுத்து அவனது ரத்தத்தை என் பாதங்களில் தடவ வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் பூவுலகில் வேடர் குலமே இல்லாது அழித்துவிடுவேன்,'' என்று மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க உறுமினான்.

அதைக் கேட்டு யானையின் பின்னால் நடந்து வந்து கொண்டிருந்த வேடன் குண்டப்பன், ''தாயே! அப்படியே செய்கிறோம்!'' எனக் கூறிவிட்டு சித்தசாதகனிடம் ''எங்கள் குலதேவதை இந்தப் பூசாரியின் வாக்கில் புகுந்து ஆணை இடுகிறது. எனவே முதலை மனிதனை அந்தப் பூசாரியிடம் ஒப்படைத்துவிடுங்கள்,'' என்றான்.

அதைக் கேட்ட ஜெயசீலன் முதலை மனிதனின் காதில் ரகசியமாக ஏதோ கூறினான். அவனும், ''யானையே! இந்த குண்டப்பனைஅலாக்காகத் தூக்கு!'' எனவே, யானையும் தன் துதிக்கையால் அவனைப் பற்றி உயரத் தூக்கியது. அவன் அலறவே ஜெயசீலன், ''ஏய்! குண்டா! உன் இனத்தவரை எல்லாம் இங்கிருந்து போகச் சொல்!'' எனக் கூறியவாறே தன் வாளை உருவி அவனது கழுத்தின் மீது வைத்தான். மறுநிமிடமே குண்டப்பன் வேடர் கூட்டத்தைப் பார்த்து, ''எல்லோரும் எதுவும் செய்யாமல் இங்கிருந்து போய் விடுங்கள்! இந்த முதலை மனிதன் மன்னரின் ஆள்!'' என்று உரக்கக் கூவினான்.



பூசாரி பேயாட்டம் ஆடியவாறே, ''உம். விடமாட்டேன் அந்த முதலை மனிதனை. எனக்கு அவனது ரத்தம் வேண்டும்,'' என்று கூறி, யானையை



நோக்கி வந்தான். அப்போது ஜெய சீலன் யானை மீதிருந்து கீழே குதித்து பூசாரியின் தலைமயிரைப் பற்றி இழுத்து, ''அடே! பொய்யாகவா 'சாமி' வந்ததாகக் கூவுகிறாய்? இது நீ குடி போதையில் பிதற்றுவது தானே. உண்மையைச் சொல்,'' என்று அதட்டினான்.

பூசாரியோ, ''மகாகாளியே! என்னைக் காப்பாற்று!'' என்று கதறினான். அப்போது பத்து குதிரை வீரர்கள் வந்து எல்லோரையும் சூழ்ந்து கொண்டு, ''இங்கே என்ன ரகளை?'' என்று அதட்டினார்கள்.

அக்குதிரை வீரர்கள் இரணியபுர மன்னரின் வீரர்களே என்பதை ஜெய சீலன் தெரிந்து கொண்டுவிட்டான். அவன் அவர்களிடம், ''அதோ அந்த யானை மீதுள்ள முதலை மனிதன் தப்பி ஓடிவிடாமல் கண்காணியுங்கள். அவனைச் சிறைப்படுத்தி வந்திருக்கிறேன்,'' என்றான்.

அப்போது அக்குதிரை வீரர்களின் தலைவன் முதலை மனிதனை வியப்புடன் பார்த்து, ''இவன் மனிதனா அல்லது ராட்சஸனா?'' என்று கேட்டான். ஜெயசீலனும், ''இவன் யாரெனத் திட்டவட்டமாகக் கூற முடியாது,'' என்றான்.

இதற்குள் பூசாரியை சித்தசாதகன் பிடித்து சற்று தூரத்திற்கு இழுத்துக் கொண்டு போய், ''ஏய்! நீ ஒன்றும் காளி பக்தன் அல்ல. இவன் மார்பிற்குக் குறி வைத்து அம்பை எய்யுங்கள்!'' என்று வேடர்களிடம் கூறினான். அதைக் கேட்ட பூசாரி பயந்து நடுங்கி ஜெயசீலன் இருந்த இடத்திற்கு ஓடி அவனது கால்களில் விழுந்து, ''ஐயா! என்னைக் காப்பாற்றுங்கள்!'' என்று கெஞ்சினான்.

ஜெயசீலனும் வேடர்களிடம், ''இவனை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடுங்கள். இனிமேல் இந்த மாதிரி செய்ய மாட்டான். இவன் நல்ல பாடம் கற்றுக் கொண்டுவிட்டான்,'' என்றான். பிறகு சித்தசாதகனிடம், ''சித்தா! நீ இவனைக் கொல்லும்படி வேடர்களிடம் கூறியது பெரும் தவறு. நீ யார் இவனைத் தண்டிக்க? நீதிபதியா அல்லது மன்னனா? இரண்டும் இல்லையே!'' என்று கூறினான்.

இதை எல்லாம் பார்த்த குதிரை வீரர்களும் அவர்களது தலைவனும் ஜெயசீலனை பயபக்தியுடன் பார்த்தார்கள். அத்தலைவனும், ''ஐயா!

தாங்கள் தாம் ஜெயசீலரா? நம் முதலமைச்சர் இங்கே மலைச் சரிவில் ஏரிக்கரையிலுள்ள கிராமத்தில் தான் முகாமிட்டிருக்கிறார். நாங்களும் உங்களைத் தேடிக் கொண்டு தான் இந்தக் காட்டிற்குள் வந்தோம்,'' என்றான்.

அப்போது சித்தசாதகன், ''பேஷ்! பேஷ்!! நானும் ஜெயசீலனும் சேர்ந்து இந்த முதலை மனிதனைப் பிடித்தோம். இவன் தான் நம் அரசகுமாரனையும் அரசகுமாரியையும் கடத்திச் சென்றவன்,'' எனக் கூறி முதலை மனிதனைச் சுட்டிக் காட்டினான்.

குதிரை வீரர்களின் தலைவனும் முதலை மனிதனை ஏறஇறங்கப் பார்த்துவிட்டு, ''இவன் இடுப்பில் கத்தியும், முதுகில் அம்பும் சொருகப்பட்டுள்ளனவே. இதென்ன புது மாதிரியான வேஷம்?'' என்று கேட்டான். அப்போது மணி வைத்தியன் ''இது வேஷம் அல்ல. இவனைக் கொல்ல முயன்றவர்கள் அளித்த பரிசுகள்,'' என்றான்.

இனியும் தாமதிக்கக்கூடாதென எண்ணிய ஜெயசீலன், ''சரி, நாம் அமைச்சரைக் காணச் செல்வோம்,'' எனவே, முதலை மனிதனும் ''இந்த அம்பின் வலி தாங்க முடியவில்லை. இதை எய்தவனை என் யானை கொன்றுவிட்டது போலிருக்கிறதே!'' என்றான்.

மணி வைத்தியனும் அந்த வேடனின் நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு, ''இவன் இன்னமும் உயிருடனேதான் இருக்கிறான்,'' என்றான். அப்போது சித்தசாதகன் வேடன் குண்டப்பனிடம், ''குண்டா! நீ அடித்துப் போட்ட காட்டுக் கோழியை எடுத்துக் கொண்டு அந்தப் பூசாரி ஓடுகிறான், பார்! அவனைத் துரத்திப் பிடி!'' என்று கூவினான். குண்டப்பனும் ஓடிப்போய் பூசாரியின் முன் நின்று, ''எங்கே என்னுடைய கோழி? மரியாதையாகக் கொடுத்துவிடு. இல்லாவிட்டால் உன் கழுத்தை நெறித்துக் கொன்றுவிடுவேன்,'' என்று பயமுறுத்தினான்.



பூசாரியோ மற்ற வேடர்களிடம், ''இந்த குண்டப்பனைப் பேய் பிடித்துள்ளது. இவனைப் பிடித்துக் கட்டுங்கள். அதன்பின் வேப்பிலை அடித்துப் பேயை விரட்டுகிறேன்,'' என்றான் அவன் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு.



மற்ற வேடர்களும் பேய் பிடித்த குண்டப்பன் தங்கைள எல்லாம் என்ன செய்வானோ எனப் பயந்து ஓடினார்கள். குண்டப்பன் பூசாரியைத் துரத்திக் கொண்டு ஓட, ஒரே நொடியில் அங்கிருந்த வேடர்களின் கூட்டம் கலைந்து மறைந்து போய் விட்டது.

சித்தசாதகனும் ''இந்த வேடர்களின் தொல்லை ஒழிந்தது. இனி நாம் போய் அமைச்சரைக் காணலாம்,'' என்றான்.

ஜெயசீலனும் சரியெனக் கூறிவிட்டு, மணி வைத்தியனிடமும் முத்துவிடமும் ''உங்கள் ஊரில் தான் அமைச்சர் தங்கி இருக்கிறாராம். நாம் எல்லோரும் அங்கே செல்வோம்,'' என்றான்.

மணி வைத்தியனும் ''அப்படியானால் இந்த முதலை மனிதனுக்கு அவரது கண் முன்னாலேயே.சிகிச்சை செய்கிறேன். அவரும் எங்கள் திறமையைப் பார்த்துவிட்டு அரசாங்கத்தில் வேலை போட்டுக் கொடுக்கட்டும்,'' என்றார்கள்.

ஜெயசீலனும், ''நீங்கள் இருவரும் இந்த முதலை மனிதனுக்குச் சிகிச்சை செய்து காயங்களை ஆற்றிவிட்டால் உங்களுக்கு அரசாங்க வேலை கிடைக்கும். அப்படி செய்யாவிட்டால் உங்கள் தலைகள் தரையில் உருளும். தெரிந்ததா?'' என்று எச்சரித்தான்.

சித்தசாதகனும், ''இவர் சொன்னதைப் புரிந்து கொண்டீர்களா?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும், ''இனி நாம் போய் அமைச்சரைப் பார்ப்போம்!'' எனவே, எல்லோரும் புறப்பட்டு அமைச்சர் தங்கி இருந்த ஏரிக்கரையை அடைந்தனர். அவரும் முதலை மனிதனைப் பிடித்து வந்ததற்காக ஜெயசீலனைப் பாராட்டினார். பிறகு அவர், ''அரசகுமாரனையும் அரசகுமாரியையும் இவன் எங்கே மறைத்து வைத்திருக்கிறான்?'' என்று கேட்டார்.

ஜெயசீலனும், ''அதை இன்னமும் அறிந்து கொள்ள முடியவில்லை. இவனை எதிர்த்து நம் இளவரசர் வாள் போர் புரிந்திருக்கிறார். அந்த வாள் ஒடிந்து இவன் உடலில் சிக்கி இருக்கிறது. இவனைப் பிடித்துக் கொண்டு வரும் போது ஒரு வேடனின் அம்பு இவனது முதுகில் பாய்ந்துவிட்டது. அதனால்

இந்த முதலை மனிதனுக்கு முத லில் சிகிச்சை அளிக்க வேண்டும். அவன் குணமடைந்த பிறகே அவ னிடம் எதையும் கேட்டு அறிய முடியும்,'' என்றான். அமைச்சரும் அவ்வாறே செய்யலாம் எனக் கூறினார்.

அப்போது முதலை மனிதன், ''ஜெயசீலரே! என் யானை தண்ணீர் குடித்துப் பல நாட்களாகி விட்டன. அதனால் அதனை ஓட்டிப் போய் இந்த ஏரியில் தண்ணீர் குடிக்க வைக் கிறேன்,'' என்றான்.

ஜெயசீலனும், ''முதலைத் தோல் போர்த்த மூடனே! எங்களிடமிருந்து தப்பிச் செல்லவா திட்டம் போடு கிறாய்? அதை நடக்கவிட மாட் டேன். யானைக்குக் குடிக்க நீரைக் கொடுக்க அதனைக் குளத்திற்குள் கொண்டு செல்லலாம். ஆனால் நீ யானையை நடத்திச் செல்லும் போதும், அதைத் தண்ணீர் குடிக்க வைக்கும் போதும் உன் இருபுறத் திலும் நானும் சித்தசாதகனும் இருப் போம். நீ தப்ப முயற்சித்தால் உன் னைச் சித்திரவதை செய்வோம்,'' என்றான்.

முதலை மனிதன் தன் யானையை ஏரிக்குள் கொஞ்சதூரத்திற்கு நடத்திச் சென்றான். அப்போது அவன் ஜெய சீலனிடம், ''ஜெயசீலா! எனக்கு மர ணம் ஏற்படும் என்பது உறுதி. எனக்கு சிகிச்சை அளிக்கும் போதே அது ஏற்படலாம். நான் குணமடைந்து விட்டாலோ மன்னர் எனக்கு மரண தண்டனை அளிப்பது நிச்சயம். இவ்வாறு எந்த விதத்தில் பார்த்தாலும் நான் இறந்து தான் போவேன் என்பது உறுதியாகிவிட்டது. உங்கள் வைத் தியர்களிடம் சிகிச்சை பெற்று அவஸ் தைப்பட்டு நான் சாக விரும்ப வில்லை. மன்னனிடம் தண்டனை பெற்று மடியவும் விரும்பவில்லை. இப்போது என்னைக் காப்பாற்று பவர் என் குல தெய்வம் மர்மக்குள மகேஸ்வரன் தான். யானையே! வழி காட்டு!'' எனக்கூறவே, அந்த யானை ஜெயசீலனோடும் சித்தசாதகனோ டும் ஏரி நீரில் முங்கியது.

*(தொடரும்)*



# என்ன விநோதம் பார்!

ஹோட்ஜா தன் ஊர்க் கடைத்தெரு வில் போய்க் கொண்டிருந்தபோது ஓரிடத்தில் ஒருவன், ''என்ன விநோதம் பார்! இந்த மாதிரிப் பறவை இந்த சுற்று வட்டாரத்திலேயே காணக் கிடைக் காது. இதன் விலை ஐம்பதே வெள்ளிக் காசுகள் தான்'' என்று கூவிக் கொண் டிருந்தான். அதைச் சிலர் வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

ஹோட்ஜாவும் அது அப்படி என்ன அதிசயப் பறவை என எண்ணி அதைப் பார்க்க அதனருகே சென்றான். அது ஒரு சாதாரண கிளி. அதற்கா ஐம்பது வெள்ளிக் காசுகள்? அதன் சிறப்பை அறிய அவனிடம் ''இந் தக் கிளியின் விலையை இவ் வளவு அதிகமாகக் கூறு கிறாயே. இதன் சிறப்பு என்ன?'' என்று கேட்டான்.

அவனும் ''இந்த மாதிரி கிளி இந்த வட்டாரத்திலேயே கிடைக் காது. அதுதான் இதன் சிறப்பு'' என் றான். ஹோட்ஜாவும் ''இது எல்லாக் கிளிகளைப் போலத்தானே இருக்கிறது. இதன் சிறப்பை நீ இன்னமும் கூற வில்லையே!'' என்று கேட்டான். அவ னும் ''இந்தக் கிளி பேசும்'' என்றான்.

விஷயத்தைப் புரிந்து கொண்ட ஹோட்ஜா உடனே தன் வீட்டிலிருந்து ஒரு சேவலை எடுத்துக் கொண்டு கடைத்தெருவிற்கு வந்து கிளி விற்ப வனின் பக்கத்தில் நின்று கொண்டு ''என்ன விநோதம் பார்! இந்த அதிசயப் பறவையின் விலை நூறு வெள்ளிக் காசுகள்'' என்று கூவினான். அப்போது கிளி விற்பவன் ஹோட்ஜா விடம் ''இது சாதாரணச் சேவல் தானே. இதற்கா நூறு வெள்ளிக் காசுகள் விலை?'' என்று கேட்டான்.

ஹோட்ஜாவும் ''உன் சாதாரணக் கிளிக்கே ஐம்பது வெள்ளிக் காசுகள் என்றால் என் சேவலுக்கும் விலை நூறு வெள்ளிக் காசு கள் என்பது சரியே!'' என் றான். கிளி விற்பவனோ, ''ஆனால் என் கிளி



பேசுமே. உன் சேவல் பேசுமா?'' என்று கேட்க, ஹோட்ஜாவும் ''என் சேவல் விடியற்காலையில் 'கொக்கரக்கோ' என்று கூவுமே. உன் கிளி அப்படிக் கூவுமா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட கூட்டத்தினர் சிரிக் கவே, கிளிக்காரன் தன் கிளியோடு அங்கிருந்து போய்விட்டான்.

நவீன
வேதாளக்
கதை

# சொல்வதா பலித்தது?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைத் தூக்கிச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! நீ இந்த பயங்கர நள்ளிரவில் விடாமல் முயற்சி செய்வது எதற்காக? நீ சொன்ன சொல் தவறாதவன் என்ற பெயரைக் காப்பாற்றிக் கொள்ளவா? ஒருவன் சொன்ன தெல்லாம் நடந்தும் கூட



அவனை ஒரு அமைச்சர் சாதாரண மனிதன் என்றே கருதினார். அந்தக் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!'' என்று கூறிக் கதையைச் சொல்லலாயிற்று.

சோமனுக்கு அந்த ஊரில் நல்லவன் என்ற பெயர் இருந்தது. அவன் தன் மனைவியுடனும் இரு குழந்தைகளுடனும் சுகமாகவே வாழ்ந்து வந்தான். ஒருமுறை அவன் அவர்களை அழைத்துக் கொண்டு அருகிலுள்ள நகரத்திற்கு ஒரு காட்டின் வழியே சென்று கொண்டிருந்தான். வழியில் இரண்டு புலிகள் அவனது மனைவியையும் குழந்தைகளையும் தாக்கிக் கொன்றுவிட்டது. சோமன் மட்டும் உயிர் தப்பித் தன் ஊருக்குத் திரும்பி வந்தான்.

அவனுக்கு அந்த ஊரில் இருக்கப் பிடிக்காததால் தன் வீட்டையும் வயல்களையும் விற்றுவிட்டு வேறு ஊருக்குப் போய் ஒரு வீட்டில் இருந்து வரலானான். அவன் அவ்வூராருக்கு உதவிகள் புரிந்து எல்லோருடைய நன்மதிப்பையும் பெற்றுவிட்டான்.

ஒருநாள் அவ்வூரில் தருமன் என்பவனின் வீட்டில் திருடு போயிற்று. அவன் கஷ்டப்பட்டு சம்பாதித்துச் சேர்த்து வைத்திருந்த பணத்தை எல்லாம் திருடன் திருடிக் கொண்டு போய்விட்டான். தருமன் ஒரு வட்டிக் கடைக்காரனிடம் கடன் வேறு வாங்கி இருந்தான். தருமன் உடனடியாகப் பணம் கொடுக்காவிட்டால் அவனது வீட்டை ஏலத்திற்குக் கொண்டுவரப் போவதாக அவன் மிரட்டினான். அதனால் தருமன் சோமனைக் கண்டு தன் நிலையைக் கூறிக் கண்ணீர் வடித்தான்.

சோமனும் ''கவலைப்படாதே! வட்டிக் கடைக்காரனைக் கண்டு பேசி உன் மீது நடவடிக்கை எதுவும் எடுக்காமல் செய்கிறேன். ஆனால் உன் வீட்டில் திருடியவன் உருப்பட மாட்டான். திருடிய அவனது கைகள் உடைந்து போகும். அவன் திருடிய பணம் அவனது ஈமச்சடங்குகளுக்குத் தான் பயன்படும். இப்படி நான் சொன்னது நடக்கத் தான் போகிறது. எல்லோரும் பார்க்கத்தான் போகிறார்கள்,'' என்று கூறி அவனை அனுப்பினான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் ஓர் அதிசயம் நடந்தது. தருமனின்

அண்டை வீட்டுக்காரனான பல ராமனை அவனது வீட்டு எருது தன் கொம்புகளால் முட்டி அவனைத் தூக்கி எறிந்தது. கீழே விழுந்த அவனது கைகள் இரண்டும் முறிந்து போயின.

அவனுக்கு வைத்தியம் செய்ய வந்தவர் சோமன் தருமனிடம் சொன்னதைக் கூறி, "சோமன் எதைச் சொன்னாலும் அதன்படியே நடக்கும். அந்தத் திருடனின் கைகள் ஒடிவதோடு அவன் திருடிய பணம் அவனது ஈமச் சடங்குகளுக்குத் தான் உதவுமாம். நான் சொல்கிறேனே என்று தவறாக நினைக்காதே! நீ அவன் பணத்தைத் திருடி இருந்தால் அவனிடம் கொண்டு போய்க் கொடுத்து மன்னிப்புக் கேள்! அந்தப் பணம் உன்னிடமிருந்து போய்விட்டால் உனக்கு மரணம் ஏற்படாது," என்றார்.

இதைக் கேட்ட பலராமன் உடனே பணத்தோடு தருமனின் வீட்டிற்குப் போய், "நான் தான் உன் பணத்தைத் திருடியவன். அதற்கு எனக்கு சோமன் கொடுத்த சாபம் பலித்து கைகளை இழந்துவிட்டேன். உன் பணத்தைப் பெற்றுக் கொண்டு என்னை மன்னித்துவிடு!" என்று கெஞ்சினான். தருமனும் அவனை மன்னித்து அனுப்பினான்.

அதுமுதல் 'சோமன் சாபமிட்டால் அது பலிக்கும்' என்ற எண்ணம் எல்லோர் மனதிலும் பதிந்துவிட்டது. இதைக் கேள்விப்பட்ட சோமன், 'நான் திருடனுக்கு சாபம் கொடுக்கவில்லை. தருமனுக்கு ஆறுதல் அளிப்பதற்காக ஏதோ கூறினேன், அவ்வளவுதான்!' என்று எண்ணிக் கொண்டான். ஆனால் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து அவனது சொல்லைக் கேட்கத் தம் ஆவலை வெளிப்படுத்தினார்கள். அந்தத் தொல்லையைத் தாங்க முடியாமல் சோமன் அந்த ஊரைவிட்டே யாருக்கும் தெரியாமல் கிளம்பிவிட்டான்.



வெகுதூரம் சென்றதும் அவனுக்குப் பசி எடுத்தது. அவன் தன் மனதில், "இப்போது யாராவது வந்து உணவளிக்க மாட்டார்களா?" என்று சொல்லிக் கொண்டான். அப்போது ஒரு குதிரை வண்டியில் ஒரு பணக்காரர் வந்தார். அவர் வண்டியை நிறுத்தி சோமனைத் தம்மோடு வண்டியில் ஏற்றிக் கொண்டு தம் வீட்டிற்கு அழைத்துப் போனார்.

அங்கு அவர் சோமனுக்கு நல்ல விருந்து அளிக்கவே, அவனும் அதை உண்டபின், ''ஆகா! என்ன அதிசயம்!! நான் சொன்னது நடந்துவிட்டதே!'' என ஆச்சரியப்பட்டுக் கூறினான். அதுகேட்டு பணக்காரர் அவன் என்ன சொன்னான் என்று கேட்க, சோமனும் தன்னைப் பற்றி விவரமாகக் கூறினான்.

அதுகேட்டு பணக்காரர், ''சந் தேகமே இல்லை. நீங்கள் எது சொன்னாலும் அது நடந்துவிடு கிறது. உங்களிடம் ஓர் அபூர்வ சக்தி இருக்கிறது. என் மகன் ஐந்தாறு ஆண்டுகளாக இனம் தெரியாத நோயினால் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறான். அவனால் பேச முடியவில்லை. கை, கால்களை அசைக்க முடியவில்லை. நீங்கள் அவன் குணமடைய வேண்டும் என்று உங்கள் வாயால் சொல்லுங் கள். அவனுக்கு வைத்தியர் கொடுத்த மருந்துகளை எல்லாம் கொடுத்துக் கொண்டே தான் வருகிறோம். அப்படியும் அவன் குணமடைய வில்லையே!'' எனக் கண் கலங்கக் கூறினார்.

சோமனும் தனக்கு ஏதோ அபூர்வ சக்தி இருப்பதாகவே நம்பி, பணக் காரரின் மகனின் உடலைத் தடவி, ''இவன் உடல் தேறி நோயற்ற வனாக ஆகட்டும்!'' என உரக்கக் கூறினான்.

மறுவிநாடியே அந்தச் சிறுவன் ''அப்பா!'' என்று அழைத்தவாறே எழுந்து உட்கார்ந்தான். தன் மகன் குணமானதைக் கண்ட பணக்காரர் சோமனைப் புகழந்ததோடு அவனது அபூர்வ சக்தி பற்றி எல்லோரிடமும் கூறினார். யாவரும் அவன் சக்தி



வாய்ந்தவன் எனக் கூறி மரியாதை செய்தனர்.

ஒருநாள் சோமன் ஆற்றங்கரையில் உலவிக் கொண்டிருந்தான். அப்போது ஏழைப் பெண் ஒருத்தி ஆற்றில் துணி துவைத்துக் கொண்டிருந்தாள். அவளது பத்து வயது மகன் ஆற்றில் கற்களை வீசி விளையாடிக் கொண்டிருந்தான். அப்போது அவன் எறிந்த ஒரு கல் சோமன் மீது பட்டு காயப்படுத்தவே, அவன் வலி பொறுக்க முடியாமல் கத்தினான். அதைக் கேட்ட சிறுவன் பயந்து ஆற்றில் குதித்துவிட்டான்.

அவனுக்கு நீந்தத் தெரியாததால் அவனது தாய் மனம் கலங்கி சோமனிடம், ''ஐயா! சிறுவன் தெரியாமல் உங்களைக் கல்லால் அடித்து விட்டான். அதனால் ஆற்றில் முழுகிச் சாகும்படி சபித்துவிட்டீர்களா? தயவு செய்து அவன் மீது இரக்கம் காட்டி அவனைக் காப்பாற்றுங்கள்!'' என உருக்கமாக வேண்டினாள்.

சோமனும், ''பயப்படாதே! அவன் நீந்திக் கரை சேர்ந்துவிடுவான்,'' என்று கூறினான். ஒரு சில நிமிடங்களிலேயே அச்சிறுவன் கை, கால்களை உதைத்து, நீரில் நீச்சல் அடித்து கரைக்கு வந்து சேர்ந்தான். அதுகண்டு அவனது தாய் சோமனின் சக்தியை வெகுவாகப் புகழ்ந்து பாராட்டினாள். சோமனும் அச்சிறுவன் நன்கு படித்து முன்னுக்கு வர வேண்டும் என்று ஆசிகள் கூறினான்.

இச்சமயத்தில் அந்நாட்டு மன்னர் மாறுவேடத்தில் வந்து அங்கே நின்று



கொண்டிருந்தார். அவர் நடந்ததை எல்லாம் கவனமாகப் பார்த்துவிட்டு சோமனைப் பற்றி விவரமாக விசாரித்து யாவற்றையும் தெரிந்து கொண்டார். தலைநகருக்குச் சென்றபின் அவர் சோமனை அரண்மனைக்கு வரவழைத்து அவனைத் தம் அமைச்சருக்கு அறிமுகப்படுத்தி அவனுக்கு உள்ள அபூர்வ சக்தி பற்றித் தான் தெரிந்து கொண்டதை விவராமாகக் கூறினார்.

அமைச்சரோ, ''இவன் சாதாரண மனிதனே. அபூர்வ சக்தி ஒன்றும் இவனுக்குக் கிடையாது. இவன் சொன்னதெல்லாம் அப்படியே நடந்ததற்குக் காரணம் அவை இயல்பாக நடக்க வேண்டியவைகளே. அவை அதன்படித்தான் நடந்தன,'' என்றார்.

மன்னரும் சற்று யோசித்துவிட்டு ''நான் இவனுக்கு நம் தர்பாரில்

உயர்பதவி அளிக்க எண்ணினேன். நீங்கள் கூறியதைக் கேட்டபின் அந்த எண்ணத்தைக் கைவிட்டுவிட்டேன். இவனுக்கு சன்மானம் கொடுத்து அனுப்பிவிடுகிறேன்,'' எனக் கூறி சோமனுக்கு நிறையப் பணம் கொடுத்து அனுப்பிவிட்டார்.

வேதாளம் இக்கதையைக் கூறி, ''சோமன் சொன்னதெல்லாம் நடந் தனவே. திருடன் கைகள் ஒடிந்து திணறுவான் என்று கூற, அது நடந் தது. தனக்கு உணவு வேண்டுமென நினைத்தான். பணக்காரர் அதை அளித்தார். நீண்ட காலமாக நோயுற் றிருந்த அவரது மகன் குணமடைய வேண்டும் என்றான். அதுவும் நடந் தது. நீச்சல் தெரியாத சிறுவன் நீந்தி விடுவான் என்றான். அதுவும் நடந் தது. இதை எல்லாம் அறிந்தும் அமைச்சர் அவை யாவும் இயல்பாக நடந் தவையே என்று எப்படிக் கூறி னார்? இதற்குத் தக்க விடை தெரிந் திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்,'' என்றது.

விக்கிரமனும் ''சோமன் தனக்கு யாராவது வந்து உணவளிக்க வேண் டும் என்று எண்ணியபோது தற் செயலாக வந்த பணக்காரர் தம் தயாள குணத்தால் அவனை அழைத்துப் போய் உணவளித்தார். அவரது மகன் குணமடைந்ததும் நீண்ட காலமாக வைத்தியர் கொடுத்து வந்த மருந்து களால் தான். நீரில் மூழ்கித் தத் தளிப்பவன் எப்படியும் கை, கால் களை ஆட்டி மிதந்து கரை சேரவே முயல்வான். அதைத் தான் ஏழைப் பெண்ணின் மகனும் செய்தான். இது போலத் திருட்டு விஷயத்திலும் அவன் ஆறுதலாகக் கூறியது இயல் பாய் நடந்தது. அவனுக்கு அத் தகைய சக்தி இருந்திருந்தால் தன் குடும் பத்தைப் புலியிடமிருந்து காப்பாற்றி இருக்கலாமே. அதைச் செய்யாததால் அவனுக்கு அபூர்வ சக்தி ஏதுமில்லை என அமைச்சர் ஊகித்து அறிந்தார்,'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலைய அவன் சுமந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



## இந்தியப் புராதனக் கதைகள் - 4

# அரசகுமாரிக்குப் பரீட்சை



அரசகுமாரி சுகன்யா ஒருநாள் தன் தந்தையிடம் ''தந்தையே! அரண்மனையிலேயே அடைந்து கிடந்து அலுத்துப் போய்விட்டது. ஏதாவது ஒரு காட்டிற்குப் போய் அங்கு இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்துவிட்டு வருவோமே! 'சலசல' வென ஓடும் நதி, ஓங்கி உயர்ந்து அடர்ந்து வளர்ந்துள்ள மரங்கள், அவற்றில் வசிக்கும் பல்விதப் பறவைகளின் இன்னொலி, ஆங்காங்கே பூத்துக் குலுங்கும் வண்ண மலர்கள், துள்ளி ஓடும் புள்ளி மான்கள் என யாவற்றையும் கண்டு களிக்க விரும்புகிறேன். அதற்கான ஏற்பாடுகளைச் செய்வீர்களா?'' என்று குழைந்தபடியே கேட்டாள்.

அவளது தந்தையும் ''மகளே! நாம் எல்லோருமே காட்டிற்குப் போய் நான்கைந்து நாட்கள் இருந்துவிட்டு வருவோம்,'' எனக் கூறி உடனேயே காட்டிற்குத் தன் பரிவாரங்களுடன் செல்ல ஏற்பாடும் செய்தான்.

தன் தாய், தந்தையுடனும் தோழிகளுடனும் காட்டை அடைந்த சுகன்யா சந்தோஷத்துடன் அங்கும் இங்கும் சுற்றி இயற்கைக் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தாள்.

ஒரு நாள் தோழிகளுடன் காட்டின் ஒரு பகுதியில் சென்ற அவள், ஒரு மானைக் கண்டு அதைத் துரத்திக் கொண்டே தன் தோழிகளை விட்டுப் பிரிந்து வெகுதூரம் போய் விட்டாள்.

மாலைப் பொழுதாகி மெதுவாக இருள் படரத் தொடங்கவே, சுகன்யா தன் இருப்பிடத்திற்குத் திரும்பலானாள். அப்போது வழியில் ஒரு பெரிய எறும்புப் புற்றைப் பார்த்து வியப்புடன் நின்றாள். ஏனெனில் அப்புற்றிலிருந்து இரு வைரக்கற்கள் ஒளிவிட்டுக் கொண்டிருப்பது தான் அவளது வியப்புக்குக் காரணம்.

- பாரதீயன் -



அவள் கீழே கிடந்த ஒரு முள்ளை எடுத்து ஒளி வந்த இரு இடங்களிலும் குத்தினாள். மறுவிநாடியே யாரோ அப்புற்றிலிருந்து 'ஐயோ!' என்று அலறுவதைக் கேட்டு சுகன்யா பயந்து ஓடித் தன் தந்தை இருந்த இடத்தை அடைந்தாள்.

அப்போது ஒரு விசித்திரம் நிகழ்ந்தது. மன்னனின் வீரர்கள் தாம் இருந்த இடத்திலிருந்து நகர முடியவில்லை. எல்லோரும் வயிற்றுவலியால் வேறு அவதிப்பட்டனர்.

இதைக் கண்ட மன்னன் இது யாரோ ஒரு முனிவர் இட்ட சாபத்தால் தான் நடக்கிறது என எண்ணி அருகில் யாராவது முனிவர் இருக்கிறாரா என்று தேடலானான். ஓர் இடத்தில் ஒரு பெரிய எறும்புப் புற்றிலிருந்து யாரோ முனகும் சத்தம் கேட்டு அவன் அதை உடைத்தான். அதில் ஒரு முனிவர் இருந்ததைக் கண்டு அவரை மெதுவாகத் தூக்கி வேறிடத்தில் உட்கார வைத்தான். அவர் பெயர் சியவனர்.

அவர் தவத்திலிருந்து கண் விழித்த போது சுகன்யா அவரது கண்களிலிருந்து வந்த ஒளியை ஏதோ இரு வைரங்களின் ஒளி என எண்ணி முள்ளால் குத்திவிட்டாள். இதனால் அவர் தம் கண்களை இழந்துவிட்டார். அவர் இட்ட சாபம் தான் எல்லோரையும் பாதித்துவிட்டது.

மன்னன் சுகன்யா தவறுதலாகச் செய்ததை அவரிடம் கூறி, அவளை மன்னிக்கும்படி வேண்டினான். ஆனால் சியவனரோ, "அவள் செய்த இந்தத் தவறுக்கு தண்டனையாக அவள் என் மனைவியாகி எனக்குப் பணிவிடை செய்ய வேண்டும். இதற்கு அவள் சம்மதித்தால் நான் இட்ட சாபத்தை விலக்கிக் கொள்கிறேன்," என்று கூற, மன்னன் திகைத்தான். ஆனால் சுகன்யா முனிவரின் விருப்பப்படி அவரை மணந்து கொண்டு ஆசிரமத்தில் வாழ்ந்து, அவருக்குப் பணிவிடை செய்து வரலானாள்.

சாபம் விலகவே மன்னன் தன் மனைவியுடனும் வீரர்களுடனும் தலைநகருக்குத் திரும்பினான். பிறகு சுகன்யா பதிவிரதை எனப் புகழ் பெற்றாள். அவளைப் பரீட்சிக்க தேவ வைத்தியர்களான அசுவினி குமாரர்கள் வந்தார்கள்.

இரட்டைப் பிறவியான அவர்களை சுகன்யா வணங்கவே, அவர்கள் "நீ அழகாக இருக்கிறாய். எங்களில்

ஒருவரை மணந்து கொண்டு சுகமாக இரு! பார்வை இழந்த ஒருவருடன் இருந்து நீ ஏன் சிரமப்பட வேண்டும்?'' என்றார்கள்.

சுகன்யா அவர்கள் கூறியதை ஏற்க மறுத்து, ''நான் பதிவிரதை. கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன் எனக் கருதுபவள். எந்த நிலையிலும் என் கணவரை விட்டுப் பிரிய மாட்டேன் இதற்காகக் கடும் சோதனைகளை ஏற்க வேண்டி வந்தாலும் அவற்றை எதிர்த்து நிற்கவும் நான் அஞ்ச மாட்டேன்,'' என்றாள்.

அப்போது அசுவினி குமாரர்கள், ''உனக்கு ஒரு பரீட்சை வைக்கிறோம். நாங்களும் உன் கணவரும் ஒரே சமயத்தில் இந்தக் குளத்தில் மூழ்கி எழுவோம். அப்போது மூவரும் ஒன்றுபோல இருப்போம். நீ சரியாக உன் கணவரைக் கண்டு பிடித்து அவரது கையைப் பற்ற வேண்டும்,'' என்றார்கள்.

சுகன்யா அப்பரீட்சைக்குச் சம்மதித்தாள். அசுவினி தேவர்களும் சியவனரும் ஒரே சமயத்தில் குளத்தில் மூழ்கி எழவே, மூவரும் ஒன்று போல இருந்தனர். சுகன்யா தன் கணவரை மனதில் எண்ணியவாறே அம்மூவரில் ஒருவரைத் தொட்டாள். அவரே சியவனர்.

அசுவினி குமாரர்கள் சுகன்யாவைப் பாராட்டி, ''ஆம். பதிவிரதையாக உள்ள பெண்மணிகள் எந்தக் கடினமான பரீட்சையிலும் வெற்றி பெற்றேவிடுவார்கள். விதியையே வெல்லக் கூடியவர்கள். அகல்யை, சீதை, நளாயினி, சாவித்திரி போன்றோர்களை எந்த சக்தியாலும் எதுவும் செய்ய முடியவில்லை. நீயும் இவர்கள் வரிசையில் சேர்ந்துவிட்டாய். உன்னைப் பரீட்சிக்கவே முதலில் எங்களில் ஒருவரை மணந்து கொள் என்று கூறினோம். நீ மறுக்கவே இந்தப் பரீட்சையை வைத்தோம். அதிலும் நீ வெற்றி பெற்றுவிட்டாய். நாங்கள் தேவலோக வைத்தியர்கள். உன் கணவரின் கண்களைக் குணப்படுத்துகிறோம்,'' என்று கூறி, சியவனருக்குப் பார்வையை அளித்து, ஆரோக்கியத்துடன் இருக்க வரமும் அளித்து அத்தம்பதிகளை வாழ்த்தி விட்டுச் சென்றனர்.





# அகமே அழகு!

கண்டனூரில் கனகசபை என்ற பணக்காரன் இருந்தான். அவனுக்கு ஏராளமான சொத்தும் இருந்தது. எல்லாவித சுக செளகரியங்களை அனுபவிக்க அவனால் முடியும். இருந்தாலும் அவன் கருப்பாகவும் பார்த்தாலே அருவருக்கத்தக்கதாய் விகாரமாகவும் இருந்தான்.

அவன் நல்ல நிறத்தில் அழகாகி விட வேண்டும் என எண்ணி நிறைய லேகியம் சூர்ணம் என்றெல்லாம் உட்கொண்டான். பலவிதத் தைலங் களையும் பச்சிலைச் சாற்றையும் முகத்திலும் உடலிலும் தேய்த்துக் குளித்தான். பல ஊர் தெய்வங்களுக்கு வேண்டுதல் செய்து பூஜை வழிபாடு எனவும் செய்து பார்த் தான். ஆயினும் அவன் அழகனாக முடியவில்லை.

அவன் சக்தி வாய்ந்த ஒரு யோகி யிடம் தன் பிரச்சினையைக் கூறிய போது அவர், ''அப்பனே! இது கட வுள் உனக்கு அளித்த உருவம். அதை மாற்ற முடியாது. உன்னிடம் ஏராள மாகப் பணம் இருக்கிறது. நீ அதை உன் உடலழகைப் பெற வீணாகச் செலவு செய்து கொண்டிருக்கிறாய். அப்படிச் செய்யாமல் ஏழை எளிய வர்களுக்குக் கொடுத்து மனநிறைவு பெறு. அப்போது உன் அகமும் முக மும் மலர்ந்து அழகாக விளங்கும்,'' என்றார்.

கனகசபை அந்த அறிவுரையை ஏற்க மனமில்லாமல் அவரிடம், ''இதைத் தவிர வேறு வழி எதுவும் இல்லையா?'' என்று கேட்டான். அவரும் அவனது எண்ணத்தைப்

- சோபா சுவாமி -

புரிந்து கொண்டார். உடனே "கோட்டையூரில் கோவிந்தசாமி என்பவன் இருக்கிறான். அவன் உன்னைவிட விகாரமாக இருக்கிறான். நீ கொஞ்ச நாட்கள் அவனோடு இருந்தால் உன்னை அழகன் என்று எல்லோரும் சொல்வார் கள்," என்று கூறிவிட்டுச் சென்றார்.

அதைக் கேட்ட கனகசபை திருப்தி அடைந்து கொஞ்சம் பணத்தை எடுத்துக் கொண்டு கோட்டையூருக்குச் சென்றான். அங்கு கோவிந்தசாமியைக் கண்டு ஒரேயடியாக மகிழ்ந்து போனான். ஏனெனில் அவன் தன்னைவிட மிக விகாரமாக இருக்கிறான் எனக் கனகசபை கண்டு கொண்டதே அதற்குக் காரணம்.



கோவிந்தசாமி சாப்பாட்டிற்கே வழியில்லாத ஏழை. அதைப் பார்த்த கனகசபை அவனுக்கு நல்ல உணவு மற்றும் வசதிகள் செய்து கொடுக்கும் பொறுப்பை மேற்கொண்டான். அவனோடு சில நாட்கள் சேர்ந்து இருந்த பின் கனகசபை அவனிடம் "நீதான் இங்கே சாப்பாட்டிற்குக் கூட கஷ்டப்படுகிறாயே! என்னோடு என் ஊருக்கு வந்துவிடு. அங்கே சுகமாக இருக்கலாம். என்னிடம் ஏராளமாகப் பணம் இருக்கிறது," என்றான்.

கோவிந்தாசாமியோ, "இந்த ஊரை விட்டு நான் எங்கும் செல்ல மாட்டேன். ஏனென்றால் நான் இவ்வூரில் எல்லோருக்கும் உதவுவதால் எல்லோரும் என்னைப் பாராட்டிப் புகழ்கிறார்கள்," என்றான். கனகசபையும் ஊராரிடம் கோவிந்தசாமியைப் பற்றி விசாரிக்க, அவனைப் பரோபகாரி என்றும், நல்லவன் என்றும், கடவுள் பக்தன் என்றும், சுயநலமற்றவன் என்றும், வேறு சிலர் மனிதரில் மாணிக்கம் என்றும் புகழ்ந்தார்கள். ஆனால் யாருமே அவன் விகாரமாய் அருவருக்கத்தக்க உருவம் கொண்டவன் என்று கூறவில்லை.

அந்த ஊரில் கனகசபை சரசு என்ற பால்காரியிடம் கோவிந்தசாமியைப் பற்றிக் கேட்டான். பேரழகியான அவள், "கோவிந்தசாமி பார்க்க அழகாக இல்லாவிட்டாலும் நான் அவரையே மணக்க விரும்புகிறேன். அவருக்கு நல்ல குணம், கள்ளம் கபடமற்ற சுத்தமான மனது. கோவிந்த சாமி பார்க்க விகாரமாக இருந்தாலு அவர் எப்போதும் சிரித்த முகத்தோ

இருக்கிறார். உனக்கும் அவருக்கும் இணை போட்டுப் பேச முடியாது,'' என்று முகத்தில் அறைந்தது போலக் கூறினாள். அதுகேட்டு கனகசபை கோவிந்தசாமியிடம் போய், ''நீ எப் போதும் சிரித்த முகத்தோடு இருக் கிறாயே! எனக்கும் சிரிக்கக் கற்றுக் கொடு!'' என்றான்.

கோவிந்தசாமியும் ''நீ உன்னைத் தாழ்வாக்கிக் கொண்டு பிறரை உயர்த்தி நினைக்கக் கற்றுக்கொள். அப்போது தான் உன் மனம் நிறைவு பெறும். உள்ளத்திலும் மகிழ்ச்சி ஏற்பட்டு முகத்தில் மிக நன்றாக தெரியும்,'' என்றான்.

அது தன்னால் இயலாதே என கனகசபை கூறவே, கோவிந்தசாமியும் ''அப்படியானால் இந்த ஊர்க்கோடி யிலுள்ள மாந்தோப்பில் யோகானந் தர் என்ற துறவி இருக்கிறார். அவ ரைக் கண்டு பேசினால் அவர் ஏதாவது வழி சொல்வார்,'' என்றான்.

கனகசபையும் யோகானந்தரைக் கண்டான். அவர் பல வேடிக்கையான கதைகளைக் கூறவே, கனகசபை வயிறு குலுங்கச் சிரித்தான். அவரும் அவனைக் கண்டு வந்த சிரிப்பை அடக்க முடியாமல் விழுந்து விழுந்து சிரித்தார். கனகசபையும் ''என் முகத் தில் சிரிப்பைப் பார்த்தா சிரிக்கிறீர் கள்? உங்கள் கதைகளே என்னைச் சிரிக்க வைத்தன,'' என்றான். யோகா னந்தரும் ''நான் சிரித்தது உன் முகச் சிரிப்பைக் கண்டு அல்ல. உன் முகத் தில் சிரிப்பின் அறிகுறியே இல்லை. ஆனால் உன் தொந்தி குலுங்கிய விதம் கண்டதும் என்னால் சிரிப்பை அடக்க முடியவில்லை,'' என்றார்.

பிறகு அவர் ''நீ சிரிக்க முயன்றும் உன் முகத்தில் அதைக் காண முடிய வில்லை. அதற்குக் காரணம் உன் மனதிலுள்ள சுயநலம். நீ அழகனாக வேண்டும் என்பதை மறந்து உன் பணத்தை எல்லோருக்கும் கொடுத்து மனநிறைவு பெறு. அப்போது உன் முகம் எப்போதும் சிரித்த முகமாய் இருக்கும்,'' என்றார்.

அதுமுதல் கனகசபை தான் அழகாக வேண்டும் என்பதை மறந்து, பிறருக்கு உதவி செய்து, மனநிறைவு பெற்று எப்போதும் சிரித்த முகமாய் இருந்து வரலானான்.



# நம் இந்தியா

ஆகஸ்ட் மாதம் வந்தாலே இந்தியா சுதந்திரம் அடைந்ததையும், அதன் முன் பின் நடந்த வரலாற்றினையும் நினைவுபடுத்திக் கொள்கிறோம். அது தொடர்பான வினாக்களே இவை.

1. சுதந்திர இந்தியாவின் முதலாவது பட்ஜெட்டை நாடாளுமன்றத்தில் வைத்தவர் யார்?
2. எந்த இந்தியக் குடியரசுத் தலைவர் மிகக் குறைந்த காலத்திற்குப் பதவியில் இருந்தார்?
3. வாக்காளர்களின் வயது 21லிருந்து 18க்கு எப்போது குறைக்கப்பட்டது?
4. 'ஜெய் ஜவான்', 'ஜெய் கிஸான்' என்ற கோஷத்தோடு 'ஜெய் விஞ்ஞான்' என்பது எப்போது சேர்க்கப்பட்டது?
5. நாடாளுமன்றத்தில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவர குறைந்தது எவ்வளவு நாடாளுமன்ற உறுப்பினர்கள் அதற்கு ஆதரவு தெரிவிக்க வேண்டும்?
6. ராஜ்ய சபையில் இந்தியாவின் துணைக் குடியரசுத் தலைவர் தாம் அதன் கூட்டங்களுக்குத் தலைமை தாங்குகிறார். அவர் இல்லாதபோது அவரது அலுவல்களை யார் கவனித்துக் கொள்கிறார்?
7. மொழி அடிப்படையில் அமைக்கப்பட்ட முதலாவது மாநிலம் எது?
8. மலையாளம் பேசும் மக்கள் உள்ள ஒரு சிறு நிலப்பகுதி கேரள மாநிலத்தில் இல்லை. அது எந்த மாநிலத்தில் உள்ளது? அந்நிலப்பகுதியின் பெயர் என்ன?
9. மாபெரும் கோமடீஸ்வரர் உருவச் சிலை எந்த மாநிலத்தில் உள்ளது?
10. மத்திய அரசின் ஆட்சியின் கீழுள்ள மிகச்சிறிய யூனியன் பிரதேசம் எது?
11. இந்தியாவின் முதலாவது விவசாயப் பல்கலைக்கழகம் எது?
12. தேசீய கால்பந்து சேம்பியன் பதவியின் பழம்பெயர் என்ன?
13. அந்தமான்-நிகோபார் தீவுகளுக்கு நேதாஜீ சுபாஷ் சந்திர போஸ் ஒரு புதிய பெயரைக் கொடுத்திருந்தார். அப்பெயர் என்ன?
14. வங்காளம் இரண்டாகப் பிரிக்கப்பட்ட போது இந்தியாவின் வைஸ்ராயாக யார் இருந்தார்?

*(விடைகள் அடுத்த இதழில்)*

### ஜூலை மாத வினாக்களின் விடைகள்

1. கோதாவரி.
2. சிம்லா.
3. சிம்லா.
4. ஆலமரம்.
5. புல்.
6. சாயம் ஏற்றும் முறை.
7. ஜாம்ஷெட்பூர்.



# தெய்வம் இருப்பது இங்கே!

புதூரில் பொன்னப்பன் பெயர் பெற்ற வைத்தியன். அவன் பணத்திற்கு ஆசைப்படாமல் எல்லோருக்கும் வைத்தியம் செய்து அவர்கள் கொடுக்கும் சொற்பத் தொகையை மிக்க மகிழ்ச்சியுடன் ஏற்று வந்தான். அவனது மனைவி கண்ணாத்தாளும் அவனுக்கு அனுகூலமாகவே இருந்து வந்தாள். இத்தம்பதிகளுக்கு இருந்த ஒரே மனக்குறை தமக்குத் திருமணமாகிப் பத்து வருடங்களாகியும் தமக்குக் குழந்தை பிறக்கவில்லையே என்பது தான்.

கண்ணாத்தாள் வேண்டிக் கொள்ளாத தெய்வங்கள் இல்லை. விரதங்கள், விசேஷப் பூஜைகள் என்றெல்லாம் செய்தும் பார்த்தாள். அப்படியும் அவளுக்குக் குழந்தை பிறக்கவில்லை. அப்போது அவளது உறவினர்களில் ஒருத்தி, ''நீ மலயகிரி மீதுள்ள சந்தானகோபாலர் கோயிலுக்குப் போய் அங்குள்ள சந்தான மண்டபத்தில் ஒருநாள் முழுவதும் அன்ன ஆகாரம் இல்லாமல் அமர்ந்து தியானம் செய். அதன் பிறகு உனக்குக் குழந்தை கண்டிப்பாகப் பிறக்கும்,'' என்றாள்.

கண்ணாத்தாள் தன் கணவனிடம் அதைக் கூறவே, பொன்னப்பனும் ''சந்தான கோபாலசாமி கோயிலுக்கா போக வேண்டும்? அது இங்கிருந்து ஆயிரம் மைல் தூரத்தில் உள்ளதே! அங்கே போய்த் திரும்பி வர நிறையப் பணம் செலவாகுமே. அவ்வளவு பணத்திற்கு நாம் எங்கே போவது? நாம் எங்கேயும் போகவேண்டாம். பகவான் நமக்குக் குழந்தை பிறக்க அங்கே போனால்தான் அருள்வாரா?

- சங்கர குருவரன் -

அந்த பாக்கியத்தை இங்கேயே இருந்து பிரார்த்தித்தால் நமக்கு அவர் கொடுக்கமாட்டாரா என்ன?'' என்றான்.

அப்போது கண்ணாத்தாள் சற்று யோசித்து, ''நாம் ஆலயத்திற்கும் போய்விட்டுத் தான் வருவோமே. பணம் இல்லை என்று தானே கவலைப்படுகிறீர்கள். அதற்கு ஒரு வழி சொல்கிறேன். நம் வீட்டிலேயே சந்தான விரதப் பூஜை நடத்துவோம். அதற்கு நாம் எல்லோரையும் அழைப்போம். எல்லோரும் நம் நோக்கத்தைப் புரிந்து கொண்டு அன்பளிப்பாகக் கணிசமான தொகையைக் கொடுப்பார்கள். அப்படிச் சேர்ந்த பணத்தைக் கொண்டு சந்தான கோபாலசாமி கோயிலுக்குப் போய் விட்டு வரலாம்,'' என்றாள்.

பொன்னப்பனும் அதற்கு இணங்கவே, சந்தான விரதப் பூஜைக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. பூஜைக்கு வந்தவர்கள் அனைவரும் கணிசமான தொகையை வைத்தியருக்குக் கொடுத்தார்கள். பொன்னப்பன் தனக்குக் கிடைத்த தொகையைக் கண்டு மலைத்துப் போனான். அவன் தன் மனைவியிடம், ''இந்தப் பணத்தைக் கொண்டு இரண்டு ஏழைக் குடும்பங்களுக்கு இரண்டு குடிசைகள் போட்டுக் கொடுக்கலாம் போலிருக்கிறதே!'' என்றான்.

அன்றிரவு திடீரென மழை பெய்யலாயிற்று. இடியும் மின்னலுமாய் வேகமாகக் காற்று வீச, விடிய விடியப் பெய்த மழை தொடர்ந்து மேலும் இரண்டு நாட்களுக்குப் பெய்தது. அதனால் யாருமே வீட்டை விட்டு வெளியே வர முடியவில்லை. மூன்றாவது நாள் மழை நின்றதும் பொன்னப்பன் தன் வீட்டு வாசல் கதவைத் திறந்து வெளியே வந்து நின்று



பார்த்தான். எங்கும் தண்ணீர் நிறைந்திருந்தது. தன் வீட்டின் எதிரே மரத்தடியில் சின்னான் தன் மனைவி மக்களோடு நின்று 'வெட வெட' வென்று குளிரில் நடுங்கிக் கொண்டிருப்பதைக் கண்டான். அதே சமயம் கண்ணாத்தாளும் அங்கு வந்து அந்தக் காட்சியைக் கண்டாள்.

பொன்னப்பனும் அவன் மனைவியும் சின்னானையும் அவனது குடும்பத்தினரையும் தம் வீட்டிற்குள் அழைத்துச் சென்றனர். மழை, காற்றினால் சின்னானின் குடிசை இடிந்து பாழ்ானதையும், இரண்டு நாட்களாக அவர்கள் எதுவுமே சாப்பிடவில்லை என்பதையும் அறிந்தனர். அவர்கள் மனம் மிகவும் வேதனைப்பட்டது.

கண்ணாத்தாளும், ''தெய்வம் இவர்களை இப்படியா சோதிக்க வேண்டும்? பச்சிளம் குழந்தைகள் பசியால் துடிப்பதை நாம் பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமா? இப்போது நம்மிடம் பணம் சேர்ந்திருக்கிறது. நாம் நமக்குக் குழந்தை வேண்டும் என்பதற்காக சந்தான கோபாலசாமி கோயிலுக்குப் போக வேண்டாம். இந்தக் குழந்தைகளை வாழ வைப்போம். நமக்குக் கிடைத்த பணத்தைக் கொண்டு சின்னானுக்குப் புதிதாகக் குடிசை கட்டிக் கொடுப்போம்,'' என்றாள்.

பொன்னப்பனும், ''ஆமாம். நீ சொல்வதே சரி. தெய்வம் அங்குதான் இருக்கிறதா? எங்கும் இருக்கிறது. இவர்களை வாழ வைத்து இவர்களது இன்முகத்தைக் கண்டால் தெய்வம் இங்கே இருக்கிறது என்று தெரியும். அந்தக் கோயிலுக்குப் போய் வேண்டினால் தான் நமக்குக் குழந்தை பிறக்கும் என்ற எண்ணத்தை விட்டு இன்று பரிதவிக்கும் இந்த ஏழைக் குடும்பத்திற்கு உதவி அந்த தெய்வத்தின் அருளை இங்கேயே பெறுவோம்,'' என்றான்.

சின்னானுக்குக் குடிசை போட்டுக் கொடுத்து பொன்னப்பன் அவனது குடும்பத்தை வாழ வைத்தான். மறு வருடத்தில் கண்ணாத்தாள் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்து மகிழ்ந்து போனாள்.






## வாழ்க்கைப் பயணம்



நீங்கள் சாதாரணப் பயணம் பற்றி அறி வீர்கள். ஆனால் வாழ்க்கைப் பயணம் பற்றி உங்களுக்குத் தெரியுமா? பனி படர்ந்த இமயமலைப் பகுதியில் உள்ள ஜம்மு, கஷ்மீர் மாநிலத்தில் குஜ்ஜார்கள் என்ற நாடோடி மலைச் சாதியினர் உள் ளனர். இவர்கள் ஒவ்வொரு ஆண்டும் நூற்றுக்கணக்கான கிலோமீட்டர் பய ணம் செய்கிறார்கள். இப்பயணத்தில் தம் கூடாரங்கள், கம்பளிப் போர்வைகள், மக்காச்சோள மாவு மூட்டை ஆகிய வற்றை மட்டக்குதிரைகளின் மீது ஏற்றிக் கொண்டு நவம்பர் முதல் ஏப்ரல் வரை கூட்டமாய் ரெய்சி, ரஜௌரி, பூஞ்ச் ஆகிய பகுதிகளில் திரிந்து வாழ்கிறார் கள். ஏப்ரலில் இமயமலைச் சமவெளி களில் கோடை காலத்தைக் கழிக்கிறார் கள். செப்டம்பரில் குளிர்காலம் ஆரம்ப மாகும் போது ஜம்முவுக்குப் போய் விடுகிறார்கள்.

## காக்கும் கடவுள்

சென்னைக்குப் பக்கத்திலுள்ள மீட்டான்குளம் என்ற ஊரிலுள்ள வர்கள் தம் ஊர்க்காவல் தெய்வ மான முனியப்ப சாமியை மிகவும் நம்புகிறார்கள். இங்குள்ள 132 குடும்பத்தவர்களின் வீடுகளுக்கும் கதவே இல்லை. இங்கு இது வரை ஒரு திருட்டு கூட நடந்ததில்லை என்று இவ்வூரார் கூறுகின்றனர். மேலும் தென்னை ஓலையால் தான் கூரை வேய்கிறார்கள். யாரே னும் தம் வீட்டுக் கூரைக்கு ஓடுகள் அல்லது வீட்டிற்குக் கதவுகள் பொருத்தினாலோ அது தெய்வக் குற்றம் என்றும் முனியப்பசாமி யின் கோபத்திற்கு ஆளாக வேண் டும் என்றும் அஞ்சுகிறார்கள். 200 வருடம் பழமையான முனி யப்பசாமி கோயிலுக்குக் கதவும் கூரையும் கிடையாது.





# ஆமைவேக அரசாங்க வேலை!

பாடியூர் கிராமம் வறட்சியால் பரிதவித்தது. தண்ணீர்ப் பஞ்சம் தலைவிரித்தாடவே, அவ்வூர் கிராம அதிகாரி கிணறு வெட்ட எண்ணி அரசாங்க உயர் அதிகாரிகளைக் கண்டு, தனது கிராமத்தின் நிலையைக் கூறி கிணறு வெட்ட மனு கொடுத்தார்.

அது உடனே ஏற்கப்பட்டு அதற்கான தொகையும் அனுமதிக்கப்பட்டது. இரண்டு மாதத்திற்குள் கிணறு வெட்ட வேண்டும் எனக் கூறி அந்த வேலை அரசாங்கப் பொதுப் பணித் துறையிடம் ஒப்படைக்கப்பட்டது.

பொதுப்பணித் துறைப் பொறியாளர் பாடியூருக்கு வந்து கிணறு வெட்ட ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தார். வேலை தொடங்கியது. அறுபது வேலையாட்கள், அவர்களைக் கண்காணிக்க ஒரு மேஸ்திரி, தினமும் எட்டு மணிநேர வேலை, அரசாங்கம் தினத்தொழிலாளர்களுக்கு விதித்துள்ள கூலி, இவ்வளவு இருந்தும் ஒரு வாரத்திற்குள் இரண்டடி ஆழத்திற்குத் தான் பள்ளம் தோண்டப்பட்டது.

இதற்குக் காரணம் வேலை செய்த முறை தான். தினமும் காலை ஒன்பது மணிக்கு வேலை ஆரம்பமாகி மாலை ஐந்து மணிக்கு முடியும். இடையில் உணவு வேளை என அரை மணி.

ஆனால் தினமும் வேலையாட்கள் காலை ஒன்பதே கால் ஒன்பதரை மணிக்கு வந்து வேலையை ஆரம்பித்து, மாலையில் நாலரை மணிக்கே வேலை செய்வதை நிறுத்திவிடுவார்கள். சாப்பாட்டு வேளை, டீ குடித்தல், ஊர் வம்பு என்றெல்லாம் பொழுதைப் போக்கவே ஒருநாளில் நான்கு மணிநேரம் மட்டுமே அவர்கள் வேலை செய்தார்கள். அதுவும் முழு உடல் உழைப்பல்ல.

இச்சமயம் அவ்வூருக்கு வந்த அரு

– சங்கர சுவாமி –

ணாசலம் என்ற பணக்காரர், வறட்சி யின் காரணமாக நிலத்தின் விலை மிகக் குறைந்துவிட்டதால் அவர் அந்த கிராமத்து நிலங்களில் பாதிக்கு மேல் வாங்கிவிட்டார்.

தம் வயல்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதற்காக அவர் தம் வயலில் கிணறு வெட்டும் வேலையைத் தொடங்கினார். அவர் முப்பது கூலி யாட்களை வைத்துக் கொண்டு ஒரு வாரத்திற்குள் பதினைந்து அடி ஆழம் தோண்டிவிட்டார். அவரது கிணறு பொதுப்பணித் துறை வெட்டும் கிணறைவிட இரு மடங்கு பெரியது.

இதைக் கண்ட கிராம அதிகாரி ஆச்சரியப்பட்டார். அவர் அருணா சலத்தைக் கண்டு ''உங்களால் 'மள மள'வென்று கிணறை வெட்ட முடி கிறதே. ஆனால் எங்களால் அது முடியவில்லையே, அது ஏன்?'' என்று கேட்டார்.

அருணாசலமும் சிரித்தவாறே, ''அது அரசாங்க வேலை. ஒரு நாளுக்கு இவ்வளவு கூலி எனக் கொடுக்கப் படுகிறது. பணம் அரசாங்கத்தினு டையது. அதனால் யாரும் அதிகம் அக்கறை காட்டுவதில்லை. நான் கிணறு வெட்டுவது என் சொந்தப் பணத்தில். நான் நாள் கூலி எனப் பேசாமல் வேலை செய்பவர்கள் செய்யும் வேலையின் அளவைப் பார்த்துக் கூலி கொடுக்கிறேன். நான் அக்கறை காட்டுவதால் வேலை விரைவில் முடிகிறது. பொறுப்பு ஒருவரிடம் தான். அரசாங்கத்துப் பொதுப் பணித்துறை வேலையைப் பிரித்து ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொருவரைப் பொறுப்பாளராக ஆக்குவதால் வேலை மெதுவாக மந்தமாக நடக்கிறது. இதுதான் தனியார் ஒரு வேலை செய்வதற்கும் அதுபோன்ற ஒரு வேலை அரசுத் துறை செய்வதற்கும் உள்ள வித்தி யாசம்,'' என்றார்.

அப்போது ''சரியாகக் கூறினீர் கள்!'' என்றார் கிராம அதிகாரி.



## கேரள மாநில நாட்டுப்புறக் கதை

*கேரளத்தை 'பகவானின் பூமி' எனக் குறிப்பிடுகிறார்கள். ஏனெனில் அவர் அளித்த இயற்கைச் செல்வங்களான தென்னை, காயல் கடல், நீலக் கடற்கரை என யாவும் அதனை அழகுப்படுத்துகின்றன.*

*கேரளம் என்ற சொல் மலையாள மொழியில் தேங்காயைக் குறிப்பிடும் 'கேர' என்பதில் இருந்து வந்தது. இந்தியாவின் மிகச் சிறிய மாநிலங்களில் கேரளமும் ஒன்று. இதன் பரப்பளவு 38,855 சதுர கி.மீ. இது இந்தியாவின் மொத்தப் பரப்பளவில் ஒரு சதவீதமே. இம்மாநிலத்தின் மக்கள் தொகை 31,838,619.*

*கேரள மாநிலம் 1956ல் திருவாங்கூர், கொச்சி சமஸ்தானங்களையும் பிரிட்டிஷ் மலபார் எனக் கூறப்பட்ட பகுதியையும் ஒன்றிணைத்து உருவாக்கப்பட்டது.*

*இது மேற்குத் தொடர்ச்சி மலையில் இருந்து அரபிக் கடல் வரை 483 கி.மீ. அகலம் கொண்டது. வடக்கே கர்நாடகமும் கிழக்கே தமிழ்நாடும் மேற்கே அரபிக்கடலும் இதைச் சுற்றி உள்ளன. இந்தியாவில் 100 சதவீத மக்கள் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் கொண்ட ஒரே மாநிலம் என்று இது புகழ் பெற்றது.*

# பெருமையை நிலைநாட்டியும்...

திருவாங்கூர் சமஸ்தானத்தில் காயம்குளம் என்னும் கிராமத்தில் கொச்சுண்ணி என்ற வாலிபன் இருந்தான். அவன் ஏழையான போதிலும் பிறருக்கு மனம் இரங்குபவன். துணிவுடன் செயல்படுபவன். இதனால் சுற்று வட்டாரங்களில் 'காயம்குளம் கொச்சுண்ணி' என்று அவனது பெயர் பிரபலமாகிவிட்டது.

ஏழை முஸ்லிம் குடும்பத்தில் பிறந்த அவன் தினமும் பள்ளி



வாசலுக்கு சென்று ஐந்து முறை நடக்கும் தொழுகைகளில் கலந்து கொண்டு வந்தான். பள்ளி வாசலுக்கு எப்போதாவது போக முடியாவிட் டால் அவன் தான் இருக்கும் இடத் திலேயே தன் துண்டை விரித்து மேற்கு நோக்கி மண்டியிட்டுத் தொழுகை புரிவான்.

இளம் வயதில் ஏழ்மையில் மிக வும் கஷ்டப்பட்டதால் அவனுக்குக் கஞ்சர்களையும் வட்டிக்குப் பணம் கொடுப்பவர்களையும் பண்ணை யார்களையும் கண்டாலே வெறுப்பு ஏற்பட்டது. ஆனால் வேலை செய் தால் தானே அவன் பிழைப்பு நடக்கும்? அதனால் விதியே என்று ஒரு பணக்காரக் கடைக்காரரிடம் வேலைக்கு அமர்ந்தான். அவரது கடையில் அவன் நன்கு வேலை செய்து தன் கடை முதலாளியின் அன்பையும் அபிமானத்தையும் அடைந்துவிட்டான். கடைக்கு வரும் வாடிக்கையாளர்களிடம் எப்படிப் பணிவாக நடக்க வேண்டும் என்



பதை அவனது முதலாளி அவனுக் குக் கற்றுத் தந்தார்.

கொச்சுண்ணி தினமும் காலையில் தன் முதலாளியின் வீட்டிற்குப் போய் கடையின் சாவிகளை வாங்கிக் கொண்டு போய்க் கடையைத் திறந்து பெருக்கிச் சுத்தம் செய்வான். பிறகு கடை வேலைகளை கவனித்துக் கொள்வான். இரவில் அவன் முத லாளி கடையிலிருந்து தம் வீட் டிற்குப் போனதும் கொச்சுண்ணி கடையைப் பூட்டி சாவிக் கொத்தை எடுத்துக் கொண்டு போய் முதலாளி யிடம் கொடுப்பான். அதன் பிறகு தன்

## புராணக் கதை

விஷ்ணு அவதாரம் எடுத்த பரசு ராமர் தான் கேரளத்தை உருவாக்கி யவர் என்ற புராணக் கதை வழக்கில் உள்ளது. இவர் க்ஷத்திரியர்களின் 21 தலைமுறையினரைக் கொன்றபின் தான் தனியே இருந்து தவம் செய்ய ஓர் இடம் வேண்டும் என்று பகவானிடம் வேண்டினார். பகவானும் பரசுராமர் தமக்கு விருப்பமான இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்று கூறி விட்டார். அதனால் பரசுராமர் கோகர்ண மலை மீது நின்று தம் கோடாலியை எறிய, அது சென்ற வழியிலிருந்த கடல் ஒதுங்கி நிலப் பரப்பை உண்டாக்கியது. இதுதான் பிற்காலத்தில் கேரளம் என்றாகியது.

# நாட்டுப்புற நடனங்கள்

கேரளத்தின் நாட்டுப்புற நடனங்கள் பலவகைப்பட்டவை. இவை நூற்றுக்கணக்கான வருடங்களாக நடந்து வருகின்றன. கூத்து எனப்படும் தனிநபர் நடனம் பெயர் பெற்றது. சாக்கியர் எனப்படும் இவர் ஒருவரே பல பாத்திரங்கள் நடிப்பது போல நடிப்பார். கூத்து சாதாரணமாகக் கூத்தம்பலம் எனப்படும் மேடை அமைத்து நடத்தப்படும். கொடியாட்டம் என்பதும் கேரளத்



தின் பழங்கால நடன நாடகம்.

கதக்களி கேரளாவின் புகழ்பெற்ற நடன நாடகம். இதில் நடிப்பவர்கள் தலை மீது சிறப்பான தலைப்பாகையையும் பகட்டான ஆடைகளையும் அணிந்து வருகிறார்கள். நாடகங்கள் பெரும்பாலும் புராணங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கும்.

மோகினி ஆட்டம், துள்ளல், கைகொட்டிக்களி என்பனவும் மற்ற பிரபல நடனங்கள் ஆகும்.



வீட்டிற்கு அவன் செல்வான்.

ஒரு நாள் இரவு கடையைப் பூட்டிவிட்டு கொச்சுண்ணி கொத்து சாவியை எடுத்துக் கொண்டுபோய்த் தன் முதலாளியிடம் கொடுத்துக் கொண்டிருந்தான். அப்போது ஒரு வாடிக்கையாளர் ஓடோடி வந்து கடை முதலாளியிடம் ''அடடா! கடையைப் பூட்டிக் கொண்டு வந்து விட்டீர்களா? எனக்கு அவசரமாக இப்போதே வெல்லம் வேண்டும். நான் வேண்டிக் கொண்ட பெருமாளுக்கு நாளை அதிகாலையில் சர்க்கரைப் பொங்கல் படைத்தாக வேண்டும். ஆனால் வீட்டில் வெல்லம் இல்லை. இந்த வேளையில் நீங்கள் கடையைத் திறந்து எனக்கு வெல்லத்தைக் கொடுத்தேயாக வேண்டும்,'' என்று கெஞ்சினார்.

வந்தவரோ அந்தக் கடையின்

## கைவினைத் திறன்



கேரளக் கைவினைக் கலைஞர்கள் அழகிய கைவினைப் பொருள்களைத் த்யாரிப்பதில் வல்லவர்கள். கல்லையும் உலோகங்களையும் பயன்படுத்தி பல கைவினைப் பொருள்களைத் தயாரித்தாலும் இவர்களது மரவேலைப் பொருள்கள் தலை சிறந்தவை. இவர்களது திறனை பழங்காலக் கோயில் களிலும் அரண்மனைகளிலும் காணலாம். பிரம்பு வேலையும் தந்தக் கடைசல் வேலைத்திறனையும் கேரளத்தில் காணலாம். தந்தக் கைவினைப் பொருள் களைத் தயாரிக்க தற்போது சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன. தேங்காய் ஓடுகளைக் கொண்டு அற்புதமாய் பல பொருள்கள் செய்யப்படுகின்றன.

கேரளம் வெண்கலப் பொருள்களுக்குப் புகழ் பெற்றது. வெண்கலத்தில் பல கடவுள்களின் உருவங்கள் செய்யப்படுகின்றன. விளக்குகள் செய்வது ஒரு முக்கிய தொழில். பலவகை விளக்குகள் பல வடிவங்களில் செய்யப்படுகின்றன. உலோகத்தில் கண்ணாடிகள் செய்வது இங்கு ஒரு சிறப்புக் கலையாகும். இது 400 ஆண்டுகளாகச் செய்யப்பட்டு வருகிறது.

தென்னை நாரால் சோபா, பாய்கள், விரிப்புகள் போன்றவை செய்யப்படுவது. கேரளக் கைவினைத் திறனை உயர்த்தியுள்ளது.

நீண்ட கால வாடிக்கையாளர். அத னால் கடை முதலாளி கொச்சுண்ணி யிடம், ''நீ இப்போதே இவருடன் நம் கடைக்குப் போய் இவர் விரும்பும் அளவு வெல்லத்தைக் கொடுத்து விட்டு வா!'' என்றார். கொச்சுண்ணி யும் அந்த வாடிக்கையாளரை அழைத்துக் கொண்டு கடைக்குச் சென்றான்.

கடையை அடைந்ததும் தான் முதலாளியிடமிருந்து சாவி வாங்கிக் கொண்டு வரவில்லை என்பது கொச் சுண்ணிக்குத் தெரிந்தது. உடனே அவன் வாடிக்கையாளரிடம், ''ஐயா!





நான் முதலாளியிடமிருந்து சாவி வாங்கிக் கொள்ள மறந்துவிட்டேன். இப்போது என்ன செய்வேன்?'' என்றான்.

வாடிக்கையாளரும், ''என்னப்பா இது? இப்போது நீ எப்படிக் கடைக்குள் போய் வெல்லத்தை எடுத்து எனக்குக் கொடுக்கப் போகிறாய்? எனக்கு இப்போதே அது வேண்டுமே!'' என்றார்.

கொச்சுண்ணியும் சற்று யோசித்து ''கவலைப்படாதீர்கள். உங்களுக்கு வெல்லம் தானே வேண்டும். நான் எடுத்து வருகிறேன்,'' என்று கூறினான். அவனுக்குத் தாவுதல் கைவந்த கலை. ஒரே தாவில் அவன் கடையின் தாழ்வான கூரை மீது தாவி ஏறிக் கடையின் பின்புறத்தில் குதித்தான். பின்புறக் கதவை அசைத்து முன்னும் பின்னும் ஆட்டித் திறந்து கடைக்குள் சென்றான். இரண்டு வெல்ல உருண்டைகளை எடுத்துக் கொண்டு கடையின் பின்வாசல் வழியே வெளியே வந்தான். பிறகு பின்புறக் கதவை முன்போல மூடிவிட்டு கூரை மீது தாவி ஏறி வாடிக்கையாளர் நின்று கொண்டிருந்த இடத்தில் குதித்தான். அவரிடம் அவன் வெல்லத்தைக் கொடுக்கவே, அவரும் அவனைப் பாராட்டிவிட்டு வெல்லத்தோடு தன் வீட்டிற்குச் சென்றார்.

கடையிலிருந்து அவன் முதலாளியின் வீட்டை அடைந்ததும் அவர் கொச்சுண்ணியிடம், ''ஏண்டா! சாவியைக் கேட்டு வாங்கிக் கொள்ளாமல் போய்விட்டாயே! அவரைக் கடை வாசலில் நிற்க வைத்துவிட்டு வந்துவிட்டாயா? இந்தா சாவி. கொண்டு போய் அவருக்கு வெல்லத்தை எடுத்துக் கொடுத்து விட்டு கடையைப் பூட்டிக் கொண்டு வா!'' என்று கூறி சாவிக் கொத்தை நீட்டினார்.

அப்போது கொச்சுண்ணி, ''இதற்குத் தேவையே இல்லை. நான் சாமர்த்தியமாகக் கடையிலிருந்து வெல்லத்தை எடுத்துக் கொடுத்து அவரை அனுப்பிவிட்டுத் தான் வருகிறேன்,'' என்றான். அதைக் கேட்ட கடை முதலாளி ஆச்சரியப்பட்டு, ''சாவி இல்லாமல் நீ எப்படிக் கடையைத் திறந்து உள்ளே போனாய்?'' என்று கேட்டார்.

கொச்சுண்ணி தன் செயலை முதலாளி பாராட்டுவார் என்று எண்ணி, ''நான் கூரை மீது தாவி கடையின் பின்புறக் கதவை அசைத்துத் திறந்து

உள்ளே போய் வெல்லத்தை எடுத்தேன். பிறகு கூரை மீது தாவி கீழே குதித்து அவரிடம் வெல்லத்தைக் கொடுத்துவிட்டு நான் இங்கே வந்தேன்,'' என்று பெருமை பொங்க உற்சாகத்துடன் கூறினான்.

கடை முதலாளி அப்போது எதுவும் கூறாமல், அவனிடம், ''அடேயப்பா! உனக்கு இந்த மாதிரி எல்லாம் செய்யவும் தெரியுமா?'' என்று நிதானமாகக் கேட்டார்.

கொச்சுண்ணியும் தன் திறனை முதலாளி வியக்கிறார் என்று எண்ணி ''சமயம் வந்தால் இப்படி எல்லாம் செய்வேன்,'' என்று சிரித்தவாறே கூறினான். கடை முதலாளி அவனை வீட்டிற்குப் போகச் சொல்லிவிட்டுத் தூங்கப் போய்விட்டார்.

மறுநாள் காலை கொச்சுண்ணி முதலாளி வீட்டிற்குப் போன போது அவர் கடைக்குப் போய்விட்டார் என்பது தெரிந்து கடைக்கு ஓடினான். முதலாளி அவனைப் பார்த்ததும், ''கொச்சுண்ணி! இனி நீ வேலைக்கு வர வேண்டாம். நீ நேற்றிரவு செய்தது போல மறுபடியும் செய்ய மாட்டாய் என்பது என்ன நிச்சயம்? உன்னை இனி நம்ப முடியாது,'' என்றார்.

கொச்சுண்ணி திகைத்து நின்றான்.



## சுற்றுலாத் தலங்கள்

சுற்றுலாப் பயணிகளுக்கு கேரளம் சொர்க்க சுகம் அளிக்கிறது. இதன் இயற்கை அழகு யாவரையும் கவர்ந்து விடுகிறது. இங்கு பல வனவிலங்கு சரணாலயங்கள் உள்ளன. தேக்கடியில் உள்ள பெரியாறு சரணாலயம் மிகப் புகழ்பெற்றது. இது இடுக்கி மாவட்டத்தில் உள்ளது. இது பெரியாறு ஏரிக் கரையில் உள்ளது. பெரியாற்றில் அணை கட்டப்பட்டு இந்த ஏரி உருவாக்கப்பட்டது. 1978ல் டைகர் பிராஜக்ட்டின் கீழ் இது புலிகள் பாதுகாப்பிடமாக அறிவிக்கப்பட்ட இக்காட்டில் யானைகளும் காட்டெருமைகளும் மான்களும் சிறுத்தைகளும் பலவித அணில்களும் கீரிகளும் உள்ளன. யானைகள் கூட்டம்கூட்டமாக இந்த ஏரிக்கு வந்து தண்ணீரை வாரி இறைப்பது கண் கொள்ளாக் காட்சி.

கொச்சியருகே உள்ள முன்னார் மலைவாசத் தலம். கொச்சியின் காயல், ஆதிராமபள்ளி நீர்வீழ்ச்சி, திருவனந்தபுரத்தின் அருகே உள்ள கோவலம் கடற்கரை எனப் பல இடங்கள் சுற்றுலாப் பயணிகளைக் கவர்பவை.

# செய்திச் சுடர்

## குஜராத்தில் அசுவமேத யாகம்



ஸ்ரீராமரும் தர்மபுத்திரரும் அசுவமேத யாகங்கள் செய்தார்கள் என்று படித்திருக் கிறோம். 2001ஆம் ஆண்டு பூகம்பத்தில் ஏற்பட்ட பெரும் இழப்பிற்காக குஜராத் மாநிலத்தில் சாஸ்திர முறைப்படி அசுவ மேத யாகம் செய்யப்படப் போகிறது. இதற்காக ஒரு மரக்குதிரை செய்ய கேரள மாநிலக் கான்ஹன்காடில் ஏற்பாடு செய் யப்பட்டது. இது ஒரே மாமரத்துண்டில் இருந்து ஆறு அடி உயரத்திற்குக் கள்ளக் குறிச்சியைச் சேர்ந்த சாமிதுரை என்பவ ரால் உருவாக்கப்பட்டது. இதைச் செய்து முடிக்க இவருக்கு நாற்பத்தைந்து நாட்கள் பிடித்தன. இது பித்தளைத் தகட்டு கவசத் தால் மூடப்பட்டு மக்கள் காண பதினைந்து நாட்களுக்கு ஒரு ரயில் சரக்குப் பெட்டி யில் எடுத்துச் செல்லப்பட்டது. மக்கள் அதற்கு மலர்மாலைகள் அணிவித்து பய பக்தியுடன் வழிபட்டார்கள்.

## அமைதியான நாள்



உலகின் பல இடங்களில் ஏப்ரல் 13ல் புத்தாண்டு நாள் கொண்டாடப்பட்ட போது இந்தோனேசியாவின் பாலித்தீவு அந்த நாளை அமைதியான நாளாகக் கொண்டாடியது. அங்கு அன்று யாரும் பயணம் செய்யவில்லை. வீடுகளிலேயே இருந்தார்கள். ரேடியோ, ஒலி பெருக்கிகள் போன்ற மின்சாதனங்களைக் கொண்டு ஓசைப்படுத்தவும் இல்லை. தொலைக்காட்சிப் பெட்டிகளை இயக்கவும் இல்லை. தொலைபேசி களைக் கூட யாரும் பயன்படுத்தவில்லை. ஹோட்டல் களில் தங்கி இருந்தவர்கள் வெளியே செல்லவில்லை. அப் பகுதியில் அன்று விமானங்கள் பறக்கவில்லை. துஷ்டதேவதைகளை முந்திய நாளிரவில் மந்திரங்களை உச்சரித்து கடல் தாண்டி போகச் செய்து மறுநாள் முழுவதும் அவை திரும்பி வந்துவிடாமல் தடுத்தார்களாம்.



# விநாயகர்

குமரனுக்குத் தன் திருமணம் தன் அண்ணன் விநாயகரால் தான் தடைப் பட்டு நின்றுவிட்டது என்று அவர் மீது கோபம் கோபமாக வந்தது. அத னால் அவன் ''ஏய் பானை வயிறா! அழுக்கு உருண்டையே! உன்னால் இந்த மாதிரி இடைஞ்சலைத் தவிர வேறு ஏதாவது செய்ய முடியுமா?'' என்று பொரிந்து தள்ளினான்.

தன்னைத் தன் தம்பி இவ்வாறு ஏசுவதைப் பொறுக்க முடியாமல் விநாயகர் பார்வதி தேவியிடம் ''அம்மா! தம்பி சொன்னதை எல்லாம் கேட்டாயா? இப்படி வாய்க்கு வந்த படி பேசலாமா இவன்?'' என்று சற்று மனத்தாங்கலுடன் கேட்டார்.

பார்வதி தேவியும் சற்றுக் கோபம் அடைந்து, ''ஆமாம். இவர்களுக்கு எல்லாம் நான் உன்னை உருவாக்கிய பொம்மை என்று இளப்பம்,'' என்றாள்.

அப்போது விநாயகர், ''அம்மா! நீ சொல்வது தம்பிக்குப் பொருத்தமே. ஆனால் என் தந்தையையும் அப்படிக் கூறவிட முடியுமா?'' என்று கேட் டார். பார்வதியும் ''ஏன் முடியாது? ஒருமுறை மோகினி உருவில் வந்த விஷ்ணுவின் பின்னால் இவர் பைத்தியம் போல ஓடவில்லையா? அந்த மோகினிக்கும் இவருக்கும் பிறந்ததுதானே பைரவர் என்ற பூதம்,'' என்றாள்.

விநாயகரும் ''அப்படியா? அந்த பைரவர் இப்போது எங்கே? நான் போய்ப் பார்க்கிறேன்,'' என்றார். பார் வதியும் ''எங்கேயோ இருக்கிறான்.



கரிய நிற ஆடைகளை அணிகிறா னாம்'' என்றாள்.

குமரனும் ''நீ இப்படியே பேசிக் கொண்டிரு. நான் போய் சூரிய தேவனைச் சுற்றிவிட்டு வருகிறேன். உன்னால் முடியுமா?'' எனக் கூறி விட்டுத் தன் மயில் மீது அமர்ந்து கிளம்பினான். விநாயகரோ மேரு மலை மீது ஏறி அதன் உச்சியில் அமர்ந்து கொண்டார். அப்பகுதி முழுவதிலும் சூரியன் வருவான். அங்கு சூரிய அஸ்தமனம் என்பதே கிடையாது.

குமரன் சூரியனைச் சுற்றிவிட்டு வந்தபோது மேருமலை உச்சியில் தன் அண்ணா விநாயகர் அமர்ந்திருப்பது கண்டு முகம் வாட்டமுற்று திரும்பி னான். குமரனைக் கண்டு பார்வதி, ''ஏன் குமரா? உன் முகம் இப்படி வாட்டமடைந்து இருக்கிறது?'' என்று கேட்க குமரன் ''நான் சூரி யனைச் சுற்றப் போனேன். அண் ணாவோ சூரியனே தன்னைச் சுற்றி வரும் இடத்தில் உட்கார்ந்துவிட் டார். அவருக்கு எதிலுமே முன் யோசனை அதிகம் தான்,'' என்றான்.

சில நாட்களுக்குப் பின் பார்வதி தேவி மீண்டும் விநாயகரிடம் கல் யாணப் பேச்சை எடுத்தாள். அப் போது அவர் ''அம்மா! உன்னைப் போல அழகான பெண் எனக்குக் கிடைத்தால் நான் கல்யாணம் செய்து கொள்ளத் தயார்,'' என்றார்.

அதைக் கேட்ட பார்வதி சற்று எரிச்சலுடன், ''அப்படியானால் தெருக்கோடியில் உட்கார்ந்து வரு கிற போகிற பெண்களைப் பார்த்துக் கொண்டிரு. யாராவது அப்படி உன் கண்ணில் பட்டால் சொல். கல் யாணம் செய்து வைக்கிறேன்,'' என்றாள்.

விநாயகரும் ''அப்படியே செய் கிறேன், அம்மா!'' என்ற கூறி, உடனே கிளம்பித் தெருமுனையில் போய் கொஞ்ச நேரம் கிழக்கு நோக்கியும் பிறகு தென்கிழக்கு, தெற்கு என வரிசையாக எட்டு திசைகளையும் பார்த்து உட்கார்ந்து காத்திருந்தார்.

சற்று நேரத்திற்குப் பின் பார்வதி தேவி ''என்ன விநாயகா! யாராவது உன் கண்ணில் பட்டாளா?'' என்று கேட்டாள். விநாயகரோ, ''இல்லை அம்மா! எந்த திசையில் பார்த்தாலும் ஜெகன்மாதாவாகிய உன் உருவம் தான் தெரிகிறது,'' என்றார்.

பார்வதி தேவியும் பரமானந்தம் கொண்டு, ''விநாயகா! எல்லாக் கடவுள்களும் கிழக்கு நோக்கித் தான் இருப்பார்கள். அப்படிப்பட்ட விக்கிரகங்களே பூஜிக்க ஏற்றவை என்பது விதி. ஆனால் நீ மட்டும் எந்தத் திசையைப் பார்த்து இருந்தாலும் உன்னை மக்கள் பூசித்து வழிபடுவார்கள்,'' என்ற வரத்தை அளித்தாள். அத்தோடு அப்போதைக்கு விநாயகரின் கல்யாணப் பேச்சு முடிந்தது.

சில நாட்களுக்குப் பின் பார்வதி தேவி மீண்டும் விநாயகரிடம் அவரது கல்யாணம் பற்றிப் பேசவே அவர், ''அம்மா! என் தம்பி தேவர்கள் படையின் சேனாதிபதியாக இருக்கிறான். அவன் வேண்டுமானால் ஒருத்திக்கு இரண்டு பெண்களாகக் கல்யாணம் செய்து கொள்ளலாம். நானோ நன்றாகச் சாப்பிட்டுவிட்டு உட்கார்ந்திருப்பவன். எனக்கு எதற்கு கல்யாணம்?'' என்று திருப்பிக் கேட்டார்.

அப்போது சிவன், ''நீ என் பிரமதா கணங்களின் அதிபதியாக இரு!'' என்றார். அப்போது விநாயகர், ''அப்பா! அதிபதியாக இரு என்று நீங்கள் சொல்லிவிட்டால் போதுமா? அதற்கு எனக்குத் தகுதி வேண்டாமா? என் தம்பியைப் போல அனுபவம் எனக்கு ஏது?'' என்றார்.

பிரமதா கணங்களும் குமரனை மதித்து வந்தார்கள். சிவனோ, ''இல்லை, விநாயகா! நீ தான் என் பிரமதா கணங்களின் அதிபதியாக இருக்க வேண்டும். குமரன் தேவ சேனாதிபதியாக இருக்கத்தானே இருக்கிறான். அவனால் இரு படைகளையும் கண்காணிப்பதும் சிரமம் தான்!'' என்றார்.

அப்போது விநாயகர், ''அப்பா!





இந்தப் பதவிக்கு ஏதாவது ஒரு போட்டி வைத்து அதில் வெற்றி பெறுபவருக்கு அதனைக் கொடுப்பது தானே முறையாக இருக்கும்?'' என்றார்.

இதற்குப் பின் அத்தகைய போட்டியை தேவர்களும் பிரமதா கணங்களும் சேர்ந்து வைத்தார்கள். பூவுலகில் உள்ள எல்லா க்ஷேத்திரங்களுக்கும் புண்ணிய தீர்த்தங்களுக்கும் போய்விட்டு யார் முதலில் திரும்பி வருகிறார்களோ அவருக்கு அப்பதவி என்று அவர்கள் முடிவு செய்தார்கள்.

உடனே குமரன் தன் மயில் மீது அமர்ந்து கிளம்பிவிட்டான். விநாயகர் எப்போதும் போல உட்கார்ந்திருந்தார். கொஞ்சமும் நகரவில்லை.

அப்போது விஷ்ணு, ''பிள்ளையாரே! உன்னிடம் எங்களுக்கு தனிப்பட்ட அபிமானம் உண்டு. நீதான் இந்தப் போட்டியில் வெற்றி பெற வேண்டும். அப்போது தான் நாங்கள் தலை நிமிர்ந்து நிற்க முடியும். மேலும் உன் தந்தையின் மகிமையையும் நீ நிரூபிக்கும் வாய்ப்பும் இப்போது உனக்குக் கிடைக்கிறது. நீ எங்கும் எழுந்து போக வேண்டாம். உட்கார்ந்த இடத்தில் இருந்தே இப்போட்டியில் நீ வெற்றி பெறலாம்,'' எனக் கூறி ரகசியமாக அவர் காதில் ஏதோ சொன்னார். விநாயகரும் அதைக் கேட்டு அதன்படியே நடப்பதாகத் தலையை ஆட்டினார். பின்னர் அவர் பஞ்சாட்சர மந்திரத்தை ஜெபிக்கத் தொடங்கினார்.

குமரன் சென்ற க்ஷேத்திரங்களில் எல்லாம் தனக்கு முன் விநாயகர் வந்துவிட்டுப் போனதாகத் தகவல் சொன்னார்கள். அதுகேட்டுக் குமரன் திகைத்து தன் பயணத்தை முடித்துக் கொண்டு திரும்பி வந்தான். அப்போதும் தனக்கு முன்பே விநாயகர் தன் மூஞ்சூறு வாகனத்தில் அமர்ந்து வந்திருப்பது கண்டு, ''அண்ணா! நீங்கள் தாம் வெற்றி பெற்றீர்கள்,'' என்றான்.

அப்போது விநாயகர், ''தம்பீ! நானாக வெற்றி பெற்றுவிடவும் இல்லை. நீயாகத் தோற்றுவிடவும் இல்லை. நாம் இருவரும் நம் தந்தையின் கைப்பொம்மைகள். அவர் ஆட்டி வைக்க, நாம் ஆடுகிறோம். இப்போது வெற்றி நம் தந்தையுடையதே. அவரது பஞ்சாட்சர நாமத்தை நான் ஜெபித்ததால் எனக்கு வெற்றி கிடைத்தது. எனவே



உண்மையில் வெற்றி பெற்றது பஞ் சாட்சரமாகிய சிவநாமமே. இதனைச் சொல்லிக் கொடுத்தவர் விஷ்ணு,'' என்றார்.

குமரனும் விநாயகரும் சிவனா ரின் காலடிகளில் விழுந்து வணங் கினார்கள். குமரன் எழுந்து, ''அண் ணாவிற்கு பிரமதா கணங்களின் அதி பதிக்கான பட்டாபிஷேகம் உடனே நடக்க வேண்டும். இது சிவபிரானின் கட்டளை!'' என்றான்.

தேவர்கள் மகிழ்ந்து போனார்கள். சித்தர்கள், யட்சர்கள், பூத கணங்கள் ஆகிய எல்லோரும் தம் சந்தோஷத் தைத் தெரிவித்தார்கள். ஆனால் பிர மதாகணப் பிரமுகர்களான பிருங்கீஸ் வரர், சிருங்கீஸ்வரர், சண்டீஸ்வரர், நந்தீஸ்வரர் ஆகியோருக்கு இது பிடிக்கவில்லை. முன்பு புத்திர கணபதியாக விநாயகர் இருந்து கர்வ பங்கம் செய்தது அவர்கள் மனதை உறுத்தியது.

அவர்கள் ''குமரனுக்கு தேவர் படை பலம் உள்ளது. நாங்கள் ஆரம் பத்திலிருந்தே சிவ கணங்களாக இருந்து வந்திருக்கிறோம். இப்போது எங்களுக்குத் தலைவனாக விநாயகர் வருவதா? இதுவரை இவர் ஏதாவது ஒரு படைத் தளபதியாகவாவது இருந்திருக்கிறாரா? இல்லையே! எனவே இவருக்கு எதற்கு பட்டா பிஷேகம்?'' என்று ஆட்சேபித்தனர்.

அப்போது சிவன் ''நான் சொன் னதற்கு எதிர்ப் பேச்சு சொல்லும் அளவிற்கு நீங்கள் வந்துவிட்டீர் களா?'' என்று பிரமதாகணப் பிரமுகர் களைப் பார்த்து இடிஇடிக்கும் குர லில் கேட்டார்.

விநாயகரோ, ''ஆமாம். இவர்கள் கேட்பது சரியே. என் கணங்கள் என்ன ஆயின? நான் புத்திர கணபதியாக இருந்தபோது சில கணங்களை வென் றேனே அவை எங்கே போயின?'' என்று கேட்டார்.

மறுநிமிடமே ஆயிரமாயிரம் விநாயகர்கள் பல இடங்களிலிருந்து கிளம்பி வரலானார்கள். எங்கும் விநாயகர் வாழ்க என்ற கோஷமே கிளம்பி விண்ணை அதிர வைத்தது. அவர்களது நான்கு கைகளிலும் வித விதமான ஆயுதங்கள் இருந்தன. பலவ்கையான விசித்திரப் பொருள் கள் இருந்தன.

மணிகள், எழுத்தாணிகள், குஞ் சலங்கள் என்றும் ஈட்டிகள், சூலங் கள், வில் அம்புகள், கத்திகள், கதாயுதங்கள், கோடாலிகள், சுத்தியல் கள், ரம்பங்கள் என்றும் அவர்களது கைகளில் விதவிதமானவை இருந் தன. வேறு சிலர் கைகளில் இசைக் கருவிகளான வீணை, மிருதங்கம், உடுக்கை, குழல் போன்றவை இருந்து இசைக்கவும் செய்தன. வேறு சிலர் கைகளில் மருந்து, மூலிகை, பச்சிலை என்றும், சில கைகளில் நவரத்தினங் களும், தங்க நகைகளும், மலர் மாலை களும், பழங்களும், தின்பண்டங் களும் இருந்தன.

சில விநாயக உருவங்கள் ஆகாயத் தில் பறந்தன. சில உருவங்களிடம் குடை, வெண்சாமரம், விசிறி போன் றவை இருந்து ஆடின. கொடிகள் பறந்தன. சிலர் இரத்தினங்கள் பதித்த சிம்மாசனத்தைக் கொண்டு வந்து போட்டார்கள். அதில் விநாயகரை உட்கார வைத்து வெண்குடை பிடித்து வெண்சாமரங்கள் வீசினர். மூஞ்சூறு அவரது காலடியில் உட்கார்ந்து 'கீச்சு' 'கீச்சு'சென்று கத்தியது.

பார்வதி தேவி விநாயகரை வணங்க முயன்றாள். அப்போது விநா யகர் தடுத்து, ''அம்மா! வேண்டாம். நான் உங்கள் மகன்,'' எனக் கூறி வணங்கினார். அப்போது விஷ்ணு ''விநாயகா! இனிமேல் நீ தடை சொல்ல முடியாது. ஏனென்றால் நீ ஆயிரம் தடவைகள் தான் தடை சொல்ல முடியும். இப்போது அந்த ஆயிரம் முறைகள் முடிந்துவிட்டன,'' என்றார்.





# சுதந்திரமாக விடு!

கருணாகரன் என்பவன் தன் ஊரின் பக்கத்திலுள்ள ராமகிரி என்ற மலைக் கோயிலுக்குத் தன் தாய், தந்தையுடன் ஒருநாள் சென்றான். அந்த மலையில் குரங்குகள் இருந்தன. கோயிலுக்கு வந்த பக்தர்கள் வாழைப்பழம், வேர்க்கடலை, சுண்டல் என்றெல்லாம் அவற்றிற்குத் தின்பதற்கு போட்டுவிட்டுப் போவது வழக்கம். கருணாகரனின் பெற்றோரும் வாழைப்பழங்களைக் கூட்டமாக உள்ள குரங்குகளுக்கு மத்தியில் வீசி எறிந்தார்கள்.

அப்போது ஒரு குரங்கு மட்டும் தனியே உட்கார்ந்து கொண்டு 'கீச் கீச்'சென்று கத்துவதைக் கருணாகரன் கேட்டான். அவன் ஓடிப்போய் பார்க்கவே அங்கிருந்த குரங்கு தன் காலைப் பார்த்தவாறே கத்திக் கொண்டிருந்தது.

கருணாகரன் தன்னிடம் இருந்த வாழைப்பழத்தை அந்தக் குரங்கிடம் கொடுத்துவிட்டு அதன் காலைப் பார்த்தான். காலில் காயம் ஏற்பட்டு ரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

அவன் உடனே தன் தந்தையிடம் போய், ''அப்பா! அங்கே ஒரு குரங்கு காயப்பட்டு வலியால் கத்திக் கொண்டிருக்கிறது. உங்களிடம் வலி நிவாரணிக் களிம்பு இருக்குமே. அதைக் கொடுங்கள். அதன் காயத்திற்குத் தடவுகிறேன்,'' என்றான்.

அவனது தந்தையும், ''அது ராம பக்தரான அனுமாரின் சந்ததியில் வந்தது. அதற்கு சேவை புரிவது. ராமருக்கே நாம் சேவை புரிவது போலாகும். நாம் நம் சொத்து சம்பந்தமான வழக்கில் நமக்குச் சாதகமாக தீர்ப்பு கிடைக்க வேண்டும் என்று ராமபிரானிடம் முறையிட வந்தோம். அவரையும் தரிசித்து விட்டோம். இப்போது அவரது பக்தரான இந்தக் குரங்கிற்கு உதவுவோம்,'' என்று கூறித் தன் பையில் இருந்த களிம்புக் குப்பியை எடுத்து

- பாபநாசம் சாமா -



அவனிடம் கொடுத்தார்.

கருணாகரனும் அக்குரங்கை அணுகி அதன் காலில் இருந்த காயத்தில் களிம்பைத் தடவினான். அது அவனை நன்றியுடன் பார்த்தது. கருணாகரனும் அதற்கு ஆறுதல் கூறுவது போல அதன் முதுகைத் தடவிக் கொடுத்துவிட்டு அங்கிருந்து சென்றான்.

அந்தக் குரங்கின் காயம் இரண்டே நாட்களில் ஆறிவிட்டது. அது சந்தோஷத்தால் குதித்தது. கருணாகரனைப் போல எல்லா மனிதர்களும் நல்லவர்களாக இருப்பார்கள் என்று எண்ணிவிட்டது. அதனால் அன்று தனக்கு வாழைப்பழம் கொடுத்த பணக்காரரின் பின்னாலேயே சென்று அவரது வீட்டை அடைந்தது. பணக்காரரும் அதை வளர்க்கத் தீர்மானித்து ஒரு கூண்டிற்குள் அடைத்து வைத்தான். அவரது குழந்தைகள் அதனுடன் விளையாடினார்கள். அவ்வீட்டு வேலைக்காரர்களும் அதற்குத் தின்பதற்கு ஏதாவது கொடுத்துக் கொண்டும் இருந்தார்கள்.

ஆனால் அந்தக் குரங்கு தன் இயல்புபடி சேட்டைகள் செய்யலாயிற்று. அது கூண்டைவிட்டு வெளியே வந்தால் அங்கிருந்த பூச்செடிகளைப் பிடுங்கிக் கசக்கி எறிந்தது. பூச்சட்டிகளைத் தூக்கிப் போட்டு உடைத்தது. வீட்டிலுள்ள பொருள்களை அங்கும்இங்குமாக எடுத்துப் போட்டுக் குப்பையாக்கியது. இந்தத் தொல்லைகளைத் தாங்க முடியாமல் அந்தப் பணக்காரர் ஒரு குரங்காட்டியைக் கூப்பிட்டு அதை அழைத்துக் கொண்டு போய் விடும்படிக் கூறினார்.

அவனும் அந்தக் குரங்கைப் பிடித்துக் கொண்டு போய் அதற்கு சில வித்தைகளைக் கற்றுக் கொடுத்தான். அதை தெருக்களில் வித்தை காட்டச் சொல்லி ஆட்டுவித்து அவன் பணம் சம்பாதித்து வந்தான்.

ஆனால் அந்தக் குரங்கு அவனிடமிருந்து எப்படித் தப்பி ஓடுவது என்றே யோசித்து வந்தது. ஒரு நாள் குரங்காட்டி அதற்கு சிவப்பு நிறச் சட்டையும் கால்சராயும் போட்டு வித்தை காட்ட தெருவழியே அழைத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தான்.

அப்போது ஒரு வைர வியாபாரி தன் பையில் விலையுயர்ந்த வைரக்

கற்களை எடுத்துக் கொண்டு தன் கடைக்குப் போய்க் கொண்டிருந் தான். குரங்காட்டியின் குரங்கு வண்ண ஆடைகளை அணிந்து அழகாக இருப்பதைக் கண்டு அவன் அதைப் பார்த்தவாறே சற்று நேரம் நின்றான்.

அப்போது குரங்காட்டி வியா பாரியின் கையிலுள்ள பணப்பை யைப் பிடுங்கிக் கொண்டு வருமாறு தன் குரங்கிடம் சொல்லி அனுப் பினான். குரங்கும் தாவி ஓடி வியா பாரியின் கையிலிருந்த பணப் பையைப் பிடுங்கிக் கொண்டு குரங்காட்டியிடம் வராமல் வேறு எங்கோ ஓடியது. அதை வியாபாரி துரத்திப் பிடிக்க முயன்றும் அது அவனுக்கு அகப்படாமல் ஓடி மறைந்தது. வியாபாரியோ தன் விலையுயர்ந்த கற்கள் போயிற்றே என்று மனம் வருந்தியவாறே தன் கடைக்குச் சென்றான்.

குரங்காட்டிக்கும் வியாபாரிக்கும் அகப்படாமல் ஓடிய அந்தக் குரங்கு ஒரு வீட்டினுள் நுழைந்தது. அது கருணாகரனின் வீடு தான். குரங்கு அவனது காலடியில் போய் விழவே அவன் அதைத் தூக்கித் தடவிக் கொடுத்தான். குரங்கும் அவன் தன் கால் காயத்திற்கு களிம்பு தடவி குணப்படுத்தியதை நினைவுபடுத்திக் கொண்டு தன் காலைத் தூக்கிக் காட்டியது.

அதைக் கண்ட கருணாகரன் மகிழ்ச்சியுடன், ''அப்பா! இங்கே வந்து பாருங்கள். அனுமார் தூதர்



வந்திருக்கிறார்,'' என்றான்.

கருணாகரனின் தந்தையும் அதைப் பார்த்துவிட்டு, ''அடடே! இதன் கையில் ஒரு பை இருக்கிறதே!'' என்று அதை எடுத்துப் பார்த்தார். அதில் வைரக்கற்களோடு வைர வியாபாரியின் முகவரி கொண்ட சிறு காகிதத் துண்டு இருந்தது.

உடனே அவர், ''இதை நான் இப்போதே போய் அந்த வியாபாரி யிடம் கொடுத்துவிட்டு வருகிறேன். இது நம்முடையது அல்ல. நீ குரங்கை பத்திரமாகப் பார்த்துக் கொள்,'' எனக் கூறிவிட்டு அந்தப் பையை எடுத்துக் கொண்டு வைர வியாபாரியின் கடைக்குச் சென்று பையை அவ ரிடம் கொடுத்து அதை ஒரு குரங்கு தன் வீட்டிற்குக் கொண்டு வந்ததாகக் கூறினார்.

வைர வியாபாரியும், ''ஆகா! உங்களை எப்படிப் பாராட்டி என் நன்றிக் கடனைச் செலுத்துவதென்றே தெரியவில்லை. இந்தப் பையில் உள்ள வைரங்கள் பல லட்சங்கள் பெறும். இவற்றை ஒரு குரங்கு பிடுங்கிக் கொண்டு போய்விட்டதே என்று கதிகலங்கிப் போனேன். நல்ல வேளையாக அது நல்லவரான உங்களிடம் கொண்டுபோய்க் கொடுத்தது. நீங்கள் நாணயஸ்தர். அதனால் இதை அடையாளம் கண்டுகொண்டு என்னிடம சேர்ப்பித்துவிட்டீர்கள். பிறர் பொருளுக்கு ஆசைப்படாமல் இப்படி அதைக் கொண்டு வந்து கொடுப்பவர்கள் மிக அரிது,'' என்றார்.

அப்போது கருணாகரனின் தந்தை, ''நான் யார் பொருளுக்கும் ஆசைப் படுவதில்லை. என் சொத்தை அடையவே நான் நீதிபதி முன் வழக்கைக் கூட கொண்டு போக முடியாமல் தத்தளிக்கிறேன். நீதிமன்றக் கீழ் நிலை ஊழியர்கள் என் எதிராளி களிடமிருந்து லஞ்சம் பெற்றுக் கொண்டு என் வழக்கை நீதிபதி முன் வைக்காமலும் என்னையும் அவரைச் சந்திக்கவிடாமல் தடுத்துக் கொண்டும் இருக்கிறார்கள்,'' என்றார்.

வைர வியாபாரியும், ''கவலைப் படாதீர்கள். நீதிபதியை நான் நன்கு அறிவேன். நாளையே உங்கள் வழக்கை எடுத்துக் கொள்ளச் செய்கிறேன். நீங்கள் நல்லவர். அதனால் தீர்ப்பு உங்களுக்குச் சாதகமாகவே இருக்கும்,'' என்றார்.

சொன்னபடியே அவர் நீதிபதியிடம் பேசி விஷயத்தை விளக்கவே, நீதிபதி வழக்கை எடுத்துக் கொண்டு அதுவரை அதைத் தம்மிடம் வராமல் தடுத்த ஊழியர்களை வேலையில் இருந்து நீக்கினார். அத்துடன் வழக்கை விசாரித்து தீர்ப்பு கூறினார். அது கருணாகரனின் தந்தைக்குச் சாதகமாக இருந்தது.

கருணாகரன் அந்தக் குரங்கைத் தன் வீட்டிலேயே கட்டிப் போட்டு வளர்க்க நினைத்தான். அவனது தந்தையோ, ''அதை சுதந்திரமாக விடு! எல்லோருக்கும் உதவி புரியட்டும்!'' என்று கூறவே, கருணாகரனும் அவ்வாறே செய்தான்.





# அதிபுத்திசாலி

ரங்கசாமி அரசாங்க வேலையிலிருந்து ஓய்வு பெற இரண்டு மாதங்களே இருந்தன. அவருக்கு அவரது ஊரில் ஒரு வீடும் பத்து ஏக்கர் நிலமும் இருந்தன.

தான் ஊருக்குப் போகும்போது தன் வீடு வெள்ளை அடிக்கப்பட்டு சுத்தமாகவும், வயல் வேலி, வரப்புகளில் உள்ள முட்செடிகள் அகற்றப்பட்டும் இருக்க வேண்டும் என எண்ணினார். அவருக்கு உடனே விடுப்பு கிடைக்காததால் தன்னிடம் பல வருடங்களாக வேலை செய்து வரும் குப்பனிடம் அந்த வேலைகளைச் செய்துவிட்டு வரும்படிக் கூறி அவனைத் தன்னுடைய ஊருக்கு அனுப்பினார்.

குப்பன் ஒரு மக்கு. அவன் ரங்கசாமியின் ஊருக்குப் போய்விட்டு இரண்டு நாட்களில் திரும்பிவந்து, ''நீங்கள் சொன்ன வேலைகளை எல்லாம் செய்துவிட்டு வந்திருக்கிறேன். உங்கள் வயல்களுக்குத் தண்ணீர் பாய்ச்ச ஒரு கிணறு இருந்தால் போதும். அதை வெட்ட ஏற்பாடு செய்துவிடுங்கள்!'' என்றான்.

ரங்கசாமியும், ''குப்பா! எனக்கு வேலை நிறைய இருக்கிறது. இரண்டு மாதத்திற்குள் எல்லாவற்றையும் செய்து முடித்தாக வேண்டும். அதனால் இந்தக் கிணறு வெட்டும் வேலையையும் நீயே செய்துவிட்டு வா! அதற்கான பணத்தை இப்போதே கொடுக்கிறேன். வாங்கிக் கொள்,'' என்று கூறிப் பணத்தைக் கொடுத்தவாறே, ''நம் ஊரில் முப்பது அடி ஆழம் தோண்டினால் தான் தண்ணீர் வரும்,'' என்றார்.

குப்பனும் பணத்தை வாங்கிக் கொண்டு ரங்கசாமியின் ஊருக்குச்

- எஸ். சங்கரராம் -



வந்து ரங்கசாமியிடம், ''ஐம்பதடி தோண்டியும் ஊற்று வரவில்லை,'' என்று சொன்னான்.

அப்போது ரங்கசாமியின் மனைவி தன் கணவனிடம் ''போயும் போயும் இந்தக் குப்பனை நம்பி அவனிடம் கிணறு வெட்டும் வேலையை ஒப் படைத்திருக்கிறீர்களே! நீங்கள் இவ னுடன் போய் இதுவரை என் னென்ன வேலை நடந்திருக்கிறது என்று பார்த்துவிட்டு தவறு ஏதாவது இருந்தால் சரி செய்துவிட்டு வாருங் கள்,'' என்றாள்.

ரங்கசாமியும் குப்பனுடன் தன் கிராமத்திற்குப் போய்த் தன் வயலைப் பார்த்தார். அங்கு மூன்று கிணறுகள் வெட்டப்பட்டிருப்பதைப் பார்த்து அவர் திகைத்துப் போனார்.

ஒரு கிணற்றின் ஆழம் முப்பது அடி. மற்றொரு கிணற்றின் ஆழம் நாற்பது அடி, மூன்றாவது கிணற் றின் ஆழம் ஐம்பது அடி.

ரங்கசாமி கோபத்தோடு, ''இதென் னடா வேலை? மூளையில்லாமல் செய்திருக்கிறாயே!'' எனக் கடிந்து கொண்டார். குப்பனோ, ''நீங்கள் சொன்னபடி தானே வெட்டினேன். ஒவ்வொரு தடவையும் உங்களைக் கேட்டுக் கொண்ட பிறகு தானே வெட்டினேன்,'' என்றான்.

ரங்கசாமியும் ''சரி, சரி. இவற்றில் வேண்டாத இரண்டு கிணறுகளைத் தூர்த்து மூடிவிட்டு, மீதமுள்ள ஒரு கிணறை அறுபது அடி ஆழம் வரை தோண்டு. அப்போது கண்டிப்பாக அதில் ஊற்று வரும்,'' என்று கூறிப்

சென்றான். அங்கு அவரது வயலில் கிணறு வெட்டும் வேலையை ஆரம் பித்தான். முப்பது அடி வெட்டியும் தண்ணீர் வரவில்லை.

அதனால் நகரத்திற்குப் போய் ரங்கசாமியிடம் அதைக் கூறவே, ரங்கசாமியும் ''சரி, நாற்பது அடி வரை தோண்டிப் பார். ஊற்று வரலாம்,'' என்று கூறிப் பணத்தைக் கொடுத்து அனுப்பினார்.

பத்து நாட்களுக்குப் பின் குப்பன் நகரத்திற்குப் போய் ரங்கசாமியிடம் ''நாற்பது அடி தோண்டியும் ஊற்று வரவில்லை,'' என்றான்.

அப்போது ரங்கசாமி ''சரி, ஐம்பது அடி வரை தோண்டிப் பார்!'' என்று கூறி, அவன் கேட்ட பணத்தையும் கொடுத்தனுப்பினார். பத்து நாட் களுக்குப் பின் குப்பன் நகரத்திற்கு

பணத்தைக் கொடுத்துவிட்டுச் சென் றார். பத்து நாட்கள் கழித்து குப்பன் நகருக்குப் போய் ரங்கசாமியிடம் "அறுபதடி வெட்டியதும் ஊற்று வந்துவிட்டது," என்று மகிழ்ச்சி அடைந்தவாறே கூறி கிணறு வெட் டிய கணக்கைக் கொடுத்தான்.

அதைப் பார்த்த ரங்கசாமி "பத்தடி அதிகம் தோண்டவா இவ்வளவு செலவு?" என்று கேட்கவே, குப் பனும் "பத்து அடி இல்லை, முப்பது அடி தோண்ட ஆகிய செலவு அது. வேண்டாத நாற்பது அடி, ஐம்பது அடி கிணறுகளைத் தூர்த்து மூடி விட்டு எஞ்சிய முப்பதடிக் கிணற்றில் தான் மேலும் முப்பது அடி தோண்டி னேன்," என்றான்.

ரங்கசாமிக்கு அவனைக் கோபித் துக் கொள்வதா அல்லது அவனது முட்டாள்தனத்தைக் கண்டு சிரிப்பதா என்று தெரியவில்லை.

அவர் தன் தலையில் அடித்துக் கொண்டு, "இந்த வேலையைச் செய்ய எனக்கு நேரம் இல்லை. நான் ஓய்வு பெற இரண்டு மாதங் களே இருப்பதால் அலுவலக வேலை களை அதற்குள் முடித்தாக வேண் டும். நான் இங்கிருந்து என் கிராமத் திற்குப் போய் வேலையை கவனிக்க முடியாது என்று உன்னிடம் ஒப் படைத்தால் நன்றாகச் செய்து முடிப் பாய் என்று எண்ணித் தான் கொடுத் தேன். இப்படியா அறிவில்லாமல் செய்வது?" என்று கேட்டார்.

அப்போது அவன் மனைவி குறுக்கிட்டு, "குப்பனைப் பற்றித் தான் உங்களுக்கு நன்றாகத் தெரியுமே! அப்படி இருக்க அவனிடம் ஏன் நீங்கள் இந்த வேலையை கொடுத்துச் செய்யச் சொன்னீர்கள்? பார்க்கப் போனால் உங்களுக்குத் தான் அறி வில்லை என்று தெரிகிறது," என்று கூறினாள்.

ரங்கசாமியும், "ஆமாம். தவறு என்னுடையதே!" என்று கூறித் தலைகுனிந்து கொண்டார்.



# பார்த்தவர்கள் பாராட்டும்
# பாசத் தொடர் - பரிசுத் தொடர்.

பெண்களுக்காகவே
பல பரிசுத் திட்டங்கள்:

ஜெயா டி.வி.யில்
'எங்க வீட்டுப் பெண்' தொடரை
தொடர்ந்து பாருங்கள்.
போட்டியில் கலந்து கொள்ளுங்கள்...
பரிசுகளை வெல்லுங்கள்...

B. நாகிரெட்டி வழங்கும்
விஜயா வாஹினி டெலிபிலிம்ஸ்

# எங்க
# வீட்டுப்
# பெண்






ஜெயா டிவியில்
ஒவ்வொரு திங்கட்கிழமை இரவு
8.30 மணி முதல் 9.00 மணி
வரையில் குடும்பத்துடன்
கண்டு மகிழுங்கள்!

வழங்குபவர்கள்



அம்புலிமாமா

இணைந்து வழங்குபவர்கள்

**Sudarmani**
**Vests & Briefs**

அம்புலிமாமாவின
அன்பளிப்பு

# வீர தீர பராக்கிரமன் 17

ஓவியம் : பாணி.

குகைக் கோயிலில் நாகபந்து ஆரம்பித்த யாகம் அரைகுறையாக நின்றுவிட, ஏதோ தவறு ஏற்பட்டதென மாந்திரீகன் நரேந்திர தேவனிடம் கூறினான். இதற்கான காரணம் ஆதித்தனே என்று தாந்திரீகன் நாகபந்து ஆவேசத்தோடு கூவ, நரேந்திர தேவனுக்கும் அச்சந்தேகம் வந்தது. இச்சமயத்தில் மன்னரைச் சந்தித்த ஆதித்தன் அவர் தலைநகருக்குச் செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்தான்.

குதிரையேறும் முன் ஆதித்தன் வீரபாகுவிற்கும் அருணாவிற்கும் தகவல் கொடுத்தான்.

அருணா மன்னரோடு செல்ல வேண்டும். மன்னர் தங்கு தடை இல்லாமல் செல்லவும் ரவீந்திர தேவனின் ஆட்கள் வழியில் தொல்லைகள் கொடுக்காமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஆதித்தன் மின்னல் வேகத்தில் சென்றான்.

ஆ! நெருப்பு உருண்டைகள்! என் பக்கம் வருகிறதே! இதன் ஒளியில் எதுவும் தெரிய வில்லையே!

அது ஆதித்தனையும் அவனது குதிரையையும் சூழ, ஆதித்தன் குதிரை மீதிருந்து துள்ளிக் குதித்தான்.

ஆ! நான் எப்படி விழுந்தேன்? காற்றிலே மிதப்பது போல உணர்கிறேனே! உண்மையில் இப்படி நடக்கிறதா? புரியவில்லையே!

ஆஹா! ஒளி வீசும் உருவம்! கருடன்!!

அவன் எதிரே ஒளிமயமாய் கருடன் தோன்றினான்.

இந்த அதிசய ஒளி என்னைக் காக்கிறதே. கருடனின் செயலா இது?

மகனே! தாந்திரீகன் நாகபந்து மிகவும் கொடியவன். இன்னும் நாற்பது நாட்களுள் அவன் ஏதோ பலி கொடுக்கப் போகிறான். அதற்குள் அவனை ஒழித்து விட வேண்டும்.

என்னை நினைத்துக் கொண்டிருக்கும் வரையில் உனக்கு எவ்விதத் தீங்கும் நேராது.

என்னை அவனிடம் அழைத்துச் செல்லுங்கள். அவனை இப்பொழுதே ஒழித்து விடுகிறேன்.







கருடன் அங்கிருந்து மாயமாய் மறைந்தபின் அவன் அளித்த சக்தியை எவ்வாறு பயன் படுத்துவது என்று ஆதித்தன் யோசித்தான்.



அதே சமயத்தில் தாந்திரீகன் நாகபந்து மாந்திரீகனையும் நரேந்திரதேவனையும் உடனே வரச் சொல்லி தகவல் அனுப்பினான்.

ஓர் இளைஞனைப் பற்றி அதிசயக் கனவு கண்டேன். என் குருவிற்கு கடைசி பலி அவன் தான்.

உன் மகனின் உயிருக்கு ஆபத்து உள்ளது. அந்த இளைஞன் அரண்மனையை அடைவதற்குள் உன் மகனை அங்கிருந்து வெளியேறிவிடும்படிச் சொல்!




மாந்திரீகன் நரேந்திரதேவனை வியப்புடன் பார்த்தான்.




தாந்திரீகனின் இரு சீடர்களுடன் மாந்திரீகன் சாந்தினி நதிக்கரைக் குச் சென்றான்.




நாகபந்து ரவீந்திரதேவனை உற்றுப் பார்த்தான்.




தாந்திரீகன் நரேந்திர தேவனை நிற்குமாறு கூறினான்.

அந்த ஆதித்தனை என்முன் கொண்டுவா! அவன் தான் பலி கொடுப்பதற்கு ஏற்றவன்.

சரி ஐயா! தங்களது கட்டளையை நிறைவேற்றுகிறேன்.

தொடரும்

உங்கள் படைப்புத் திறனைப் பயன்படுத்தி பரிசை வெல்லுங்கள்

# உங்கள் படைப்புகளுக்கான அழைப்பு

# சிறுவர் சிறப்பிதழ்

## (நவம்பர் 2002 இதழ்)

**இளம் எழுத்தாளர்களுக்கு :** நீங்களே சொந்தமாக எழுதிய 500 சொற்களுக் குள் உள்ள கதைகளைக் வசீகர தலைப்புகள் அளித்து அனுப்புங்கள். கதைகள் ஆங் கிலம், இந்தி, வங்காளம், ஒரியா, மராத்தி, குஜராத்தி, தெலுங்கு, கன்னடம், தமிழ், மலையாளம் ஆகிய மொழிகளில் இருக்கலாம். நீங்கள் மூன்று கதைகளைப் போட்டிக்கு அனுப்பலாம். தேர்ந்தெடுக்கப் பட்ட கதைகள் சிறுவர் சிறப்பிதழில் (நவம்பர் 2002) 12 மொழிகளிலும் வெளியிடப்படும்.

**இளம் ஓவியர்களுக்கு :** நீங்கள் மூன்று சித்திரங்களையோ அல்லது ஓவியங் களையோ இந்தியப் புராண/வரலாற்று நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண் டதாய் வரைந்து அவற்றைச் சொற்களில் விளக்கி அனுப்ப வேண்டும். இவற்றில் இருந்து நாங்கள் தேர்ந்தெடுக்கும் ஓவியர்கள் சென்னைக்கு வரவழைக்கப்படு வார்கள் (பயணப் பணம் கொடுக்கப்படும்). அவர்கள் சிறுவர் சிறப்பிதழுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளுக்கு ஓவியங்கள் வரைந்து கொடுக்க வேண்டும்.

**முடிவு தேதி : ஆகஸ்ட் 31, 2002**

**கவர்ச்சிகரமான பரிசுகளைத் தட்டிச் செல்லுங்கள்**

**போட்டோ :** உங்கள் பாஸ்போர்ட் அளவு போட்டோவை படைப்புடன் இணைத்து அனுப்புங்கள்.

(கீழுள்ள கூப்பனை நிரப்பி, உங்கள் படைப்புகளுடன் இணைத்து, **'சிறுவர் சிறப்பிதழ் போட்டி'**, சந்தமாமா இந்தியா லிமிடெட், 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை - 600 097, என்ற முகவரிக்கு அனுப்பவும்.)

பெயர் : .................................................. வயது/பிறந்த தேதி : ........................

வகுப்பு : .................. பள்ளி : ..........................................................

வீட்டு முகவரி : ..........................................................................

..................................................................................................

.................................................................. பின்கோடு : ........................

படைப்புகளின் விவரங்கள் :

1. ......................................................................
2. ......................................................................
3. ......................................................................

மேற்குறிப்பிட்ட படைப்புகள் என் மகனால்/மகளால் யாருடைய உதவியும் இல்லாமல் சுயமாக எழுதப்பட்டவை என்று நான் உறுதி அளிக்கிறேன். அச்சிலும் மின்சாதனங்களிலும் மொழியிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட படைப்புகளைப் பயன்படுத்திக் கொள்ளும் முழு உரிமை சந்தமாமா வினுடையது என்பதற்கு இதன் வாயிலாகக் கட்டுப்பட்டச் சம்மதிக்கிறேன்.

போட்டியாளரின் கையொப்பம் பெற்றோரின் கையொப்பம்



# கேளிக்கை நேரம்

## ஒன்றில் பல வேடிக்கைகள்

ஒரு படத்தைக் கொண்டு பலவற்றைச் செய்து காட்டலாம். முதலில் படத்தில் வண்ணம் தீட்டுங்கள். பிறகு எறும்பு அத்தையில் என்ன கோளாறு என்று காணுங்கள். இதில் எந்த இரு வண்டுகள் ஒன்றுபோல் உள்ளன என்று காணுங்கள்.







## ஒரே கோட்டில்

இந்த அன்னப் பறவை பார்க்க அழகாக இருக்கிறது அல்லவா? இதன் சிறப்பு ஒரே கோட்டில் கையை எடுக்காமல் வரைந்தது தான். நீங்களும் இதைச் செய்து பார்க்கலாமே!

# எறும்பு வரைய...



நீங்கள் ஓவியராக விரும்புகிறீர்களா? அப்படியானால் இங்கு வரைப்பலகையில் உள்ள எறும்பு வரையும் முறையை முயற்சி செய்யுங்கள்.



# தாத்தாவின் தாடி

இந்த தாத்தாவின் நீண்ட தாடிக்குள் சில மிருகங்களின் படங்கள் மறைந்துள்ளன. அவற்றை உங்களால் கண்டுபிடிக்க முடியுமா?

(விடைகள் 66ம் பக்கத்தில்)




# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/-
போட்டி முடிவு அக்டோபர் 2002 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்

ஜூன் 2002 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர் :
**வி. வரதன்**
C/o.பி. தியாகராஜன்,
*34, வடக்குத் தெரு,*
*தச்சநல்லூர் - 627 358.*

பரிசு பெற்ற வாக்கியங்கள்





போகுமா?
போகாதா?

கேளிக்கை நேரத்திற்கான விடைகள் (பக்கம் 64)



தாத்தாவின் தாடி

ஒன்றில் பல வேடிக்கைகள்



எறும்பில் ஒரு கால் இல்லை

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited. No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

